

உ

சிவமயம்.



ஸ்ரீலஸ்ரீ நடேச ஞான தேசிக ஸ்வாமி

# கட்டுரைப் பூங்கா.

அனபளிப்பு

ரியர் :

த்துவான் திரு. ஆ. சிவலிங்கனார்,

விரிவுரையாளர்

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி, மயிலம்.



ஒற்றுமை ஆபீஸ் :

நெ. 8, வியாசராவ் தெரு, தியாகராயநகர், மதராஸ்-17.

1952

 [விலை ரூ. 1—8—0

மயிலம் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி

விரிவுரையாளர்

## திரு. வித்துவான் கே. குஞ்சிதபாதனார்

அவர்கள் எழுதிய

# முன்னுரை.

நாட்டுரைப் பூங்கா என்னும் இந்நூல் ஒரு பத்துத் தலைப்புகளைக்கொண்டு மிளிர்கிறது. மறுமலர்ச்சி நூல்கள் மலர வேண்டுமென்று மக்களினம் கருதும் இந்நாளில் இப் பூங்கா வெளிவருவது ஏற்புடைத்தே. இப் பூங்காவினை எமது ஆசிரியரும் நண்பருமான வித்துவான் திரு. ஆ. சிவலிங்கனார் அவர்கள் அழகுற அமைத்துள்ளார்கள். புலமையுடையார் மட்டுமே புகுந்து புரிந்துகொள்ளும் பாக்களின் உறைபொருளை அனைவரும் அறிந்து அக மகிழும் வண்ணம் அலர்த்திக் காட்டுகிறது பூங்கா. அதனுள் நுழைந்தால் குமரகுருபரரைக் குறுக்கிடலாம். அவர் கூறும் குழந்தை வளர்ப்பைக் கேட்டுக் குதூகலிக்கலாம். அதுமட்டுமா சமயத்தலைவராம் அப்பர் அடிகளை அடையலாம். அவர் கூறும் அறிவுரையை மெய்கண்டார் மெய்ம்மொழியோடு ஒப்பிட்டு உள மகிழலாம். கம்பரைக் காணலாம். அவர் கூறும் விதியின் வலிமை வள்ளுவரோடு வாதிட்டு வல்லமை பெறலாம். பாக்கிழாராம் சேக்கிழார், சிலம்பைச் செப்பிய இளங்கோ, மணிமொழிந்த தேவர் ஆகிய மூவரையும் ஒருங்கே கண்டு ஓவியக் கலையைப்பற்றிய உண்மைப் பாக்களின் நலத்தை உசாவலாம். இப்படியே கேள்விச் செல்வம் அனுபவித்த பிறகு, பகைவர் நடுங்கப் பாராண்ட பாண்டியனைப் பார்க்கலாம். அவன் கூறும் பண்புடை மக்கட் செல்வத்தைக் கேட்டு மாண்படையலாம். பழமொழிக்குப் பொருளைப் பல்லோர் கூறப் பாங்காய் அறியலாம். "நடுவணது எய்த இருதலையும் எய்தும்'' என்ற பொருளைச் சான்றோர் கூறச் சலிக்காமல் கேட்கலாம். பல சொல்லத் தேவையில்லை. இப் பூங்காவில் அனைவரும் தங்கி அகமகிழ்வார்களாக.

15-8-'52. கே. குஞ்சிதபாதன்.

சி. துரைசாமி,
தலைவர்,
ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள்
தமிழ்க் கல்லூரி, மயிலம்:

## மதிப்புரை.

கற்றவர் விரும்பும் கட்டுரைப் பூங்காவின்கண் நுழைந்து கவின்பெற்ற மலர்கள் பல மிளிர்வதைக் கண்டனன். சங்க காலத்துச் சான்றோர் இடைக்காலத்து வாழ்ந்த திருமூலர், கல்வியிற் பெரியர் கம்பர், பிற்காலத்தில் வாழ்ந்த தண்டமிழ்த் திறனும் தெய்வத் தன்மையும் வாய்ந்த குமர குருபரர் ஆகியோரைப் போன்ற பெரியோர்கள் பலரின் செய்யுட்களின் நலன்கள் யாவரும் உணருமாறு எளிய செந்தமிழ் நடையில் தெளிவாக எழுதப்பெற்றுள்ளன. "பொருட் பிரிவு" என்னும் கட்டுரையில் காணப்பெறும் தெள்ளிய பொருள் நலன்களைக் காணும்போது இலக்கண இலக்கிய நூல்களில் இவ்வாசிரியருக்குள்ள ஆழ்ந்த அறிவு புலனாகின்றது. "நாயும் கல்லும்" என்னும் கட்டுரையில் இந்நூலாசிரியர் தருமபுரம் சென்றுவந்த நிகழ்ச்சியை உணர்த்துவதிலிருந்து சிறிய கருத்துக்களைப் புலப்படுத்த வேண்டின் அதற்குத்தக உலக நிலையில் தனது அனுபவ வாயிலாக எடுத்துக்காட்டு தந்து உணர்த்தும் திறம் பாராட்டுதற்குரியது. நாணம் கற்பு என்ற இரண்டிற்கும் நிகழ்கின்ற போராட்டத்தைத் "தரும சங்கடம்" என்ற கட்டுரையில் சித்தரிக்கும் விதமும் சில பாட்டுக்களிலுள்ள கருத்தை ஓவியமாக்கித் தருகின்ற பாட்டோவியமும், இவ்வாசிரியரின் ஆராய்ச்சித் திறனை அறிவுறுத்துகின்றன. சிறந்த கருத்துக்களை எளிய நடையில் வெளிப்படுத்துகிற இத்தகைய சிறந்த கட்டுரைகள் அடங்கிய நூல்கள் பல இக்காலத்து இளைஞர்கள் படித்து இன்புறுதற்குச் சிறந்தன ஆகும். ஆதலின் இந்நூலாசிரியரும் எங்கள் கல்லூரி விரிவுரையாளருமாய வித்துவான் திரு. சிவலிங்க முதலியார் அவர்கள் இதுபோன்ற நூல்கள் பலவற்றை ஆக்கிக் கொண்டு, எல்லா நலன்களும் பெற்று விளங்குமாறு எங்கள் குருநாதனாகிய ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடிகளை இறைஞ்சுகின்றனன்.

15-8-'52.

சி. துரைசாமி.

முத்து. இராசாக்கண்ணனார், M.A., B.O.L.,
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசினர் கலைக்கல்லூரி, கோவை.

## மதிப்புரை.

"கட்டுரைப் பூங்கா" என்னும் கட்டுரைத் தொகுதி வரப் பெற்றேன்; படித்து மகிழ்ந்தேன்.

பூங்காவில் பலவகை மரங்களும் செடிகளும் நிறைந்து மலர் மணத்துடன் இன்பம் பயப்பது போன்றே இத் தொகுதியும் பல்வகைக் கட்டுரைகளால் நிரம்பிச் செந் தமிழ் மணம் கொழித்து அறிவுக்கு நல்லின்பம் விளைக் கின்றது. சங்க காலத்தும் இடைக்காலத்தும் பிற்காலத் தும் எழுந்த சீரிய செந்தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள் களைக் காட்டிக் கருத்தொருமை விளக்கமுறக் கட்டுரை கள் எழுதப்பட்டிருக்கின்றன. இக்கட்டுரைகள் வளரும் தமிழுக்கு நல்லாக்கம் அளிக்கும் என நம்புகின்றேன்.

இந்நூலாசிரியர் திரு. ஆ. சிவலிங்கனார் பல நூல் களுக்கு ஆசிரியராக விளங்குகின்றவர். அவர்தம் இம் முயற்சி பெரிதும் பாராட்டப்படுதற் குரித்து.

சொல்வளமும் பொருள் நலமும் கருத்தாழமும் கலந்து சிறக்கும் இந்நூலினைக் கல்வி உலகம் பயன்படுத் திக் கொள்ளவேண்டும் என்பது என் விருப்பம். நூலுக்கு என் வாழ்த்து. நூலாசிரியருக்குப் பல்லாண்டு கூறு கிறேன்.

இங்ஙனம்:

5-8-'52.

முத்து. இராசாக்கண்ணனார்,

# பொருளடக்கம்.

பக்கம்

# கட்டுரைப் பூங்கா.

## 1. *முத்துக்குமாரசாமிப் பிள்ளைத் தமிழ்

தெருவில் ஐந்தாறு சிறு பெண்கள் மணலைக் குவித்து வீடு கட்டி, வெள்ளை மணலும், செங்கற்பொடியுங்கொண்டுசோறு சமைத்து, விளையாடிக்கொண்டிருந்தார்கள். அப்போது, ஒரு சிறுவன்-$2\frac{1}{2}$ வயதுடையவன் பார்வைக்கு ஓர் அதிகாரியின் மகன் என்று சொல்லும் படியான தோற்றம் உடையவன், அங்கு ஓடிவந்தான். வந்தவன் அப் பெண்கள் கட்டிய மணல் வீட்டைக் காலால் கலைக்கத் தொடங்கினான். சிறுமிகள் நல்லதனமாகவே வேண்டாம் என்று சொல்லிப் பார்த்தார்கள். சிறுவன் கேட்காமல் கலைத்தான். உடனே, அவர்கள் "நீ அதிகாரி வீட்டுப் பிள்ளையாய் இருந்தால் நீ கலைப்பதை நாங்கள் பொறுத்துக்கொள்ள வேண்டுமா என்ன? எங்களோடு வந்து விளையாடு; உனக்குஞ் சோறு போடுகின்றோம்" என்றார்கள். அவ்வழியே சென்ற எம் காதில் இப்பேச்சு பட்டது. பட்டமாத்திரத்தில் ஆச்சரியத்தால் திடுக்கிட்டோம். ஏன்? இவ்வாறு சொல்வது போலவே ஒரு பாட்டு முத்துக்குமாரசாமிப் பிள்ளைத் தமிழில் இருப்பது நினைவுக்கு வந்ததுதான் காரணம்.

ஐந்தாறு சிறு பெண்கள் மணல் வீடுகட்டி விளையாடிய சமயத்தில் குழந்தைப் பருவத்தை யுடைய முருகன் அவர்கள் மணல் வீட்டைக் கலைத்தான்.

---

* திருச்சி வானொலியில் 18-4-50-ல் பேசப்பட்டது.

உடனே, அவர்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள்; கேட்கவில்லை. அதனால் நீ சிவபெருமானுக்கும் உலகம் ஏழையும் பெற்ற தாயாகிய உமையம்மை யாருக்கும் அருமைப் பிள்ளையாக இருக்கலாம்; அதற்காக நாங்கள் சமைத்த சிறு சோறு வேண்டுமானால் இடுகின்றோம்; அதை விடுத்து நீ வீட்டைக் கலைக்கும் குறும்பு எல்லாம் நாங்கள் பொறுக்கவேண்டும் என்னும் விதியுண்டோ" என்றார்கள்.

"பிள்ளை மதிச்செஞ் சடைச்செருகும்
பெருமா னார்க்கும் உலகேழும்
பெற்ற தாய்க்கும் நீயருமைப்
பிள்ளை யெனில்எம் பேராய
வெள்ளம் அமைத்த சிறுசோறு
வேண்டில் இடுகேம் அலதுஎளியேம்
விளையா டிடத்துச் சிறுகுறும்பு
விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ"

என்பது சிறுமியர்கள் சொன்னதாக உள்ள பாட்டு.

ஆம்! புலவர்கள், உலகில் நடக்கும் நிகழ்ச்சிகளைத்தான் தங்கள் நூல்களில் அமைப்பார்கள். உலக நடை வேறு புலவர்கள் நடை வேறல்ல. ஆனால் அவர்களுக்குத் தனிப்பட்ட ஓர் உரிமையும் உண்டு. அதுதான் கற்பனை உரிமை. உள்ள ஒன்றைக் கொண்டு தாமொரு கருத்தைப் புதுப்பித்தலே கற்பனை. உலக நிகழ்ச்சி, கற்பனை ஆகிய இரண்டும் முத்துக்குமாரசாமிப் பிள்ளைத் தமிழில் நிறைந்திருக்கின்றன.

மறந்தேம்; முத்துக்குமாரசாமிப் பிள்ளைத் தமிழ் என்றால் என்ன என்பதைச் சொல்லவேண்டுமல்லவா? சீர்காழிக்கு அடுத்துள்ள வயித்தீசுரன் கோயில் என்ற

ஊரில் எழுந்தருளியிருக்கும் முருகன் மீது பாடப்பட்ட ஒரு நூல் அது.

பாண்டிய நாட்டு ஸ்ரீவைகுண்டத்தில் சண்முகசிகா மணிக் கவிராயர்க்கும் சிவகாமியம்மையார்க்கும் தோன்றிய குமர குருபரர் என்னும் அடிகளால், தருமபுர ஆதீன நான்காவது குருமூர்த்திகளாக விளங்கிய மாசிலா மணி தேசிகர் கட்டளைப்படி அவர் சிதம்பரம் செல்கை கையில் இடையில் உள்ள வயித்தீசுரன் கோயிலில் சென்று இறைவனை வழிபடும்போது, அங்குள்ள முத்துக்குமாரசாமி என்ற சிறப்புப் பெயர் கொண்டருளிய முருகன் மீது பாடப்பட்டது இது.

பிள்ளைத் தமிழ் என்பது தேவர்களையாவது மக்களில் சிறந்தவனையாவது குழந்தையாகப் பாவித்து ஒரு புலவனால் நூறு பாட்டுக்களில் பாடப்படுவது அப்படிப் பாடுங்கால் பத்துப் பருவங்கள் அமைத்துப் பாடுதல் மரபு.

குழந்தைகளைக் காக்கும்படித் தேவர்களை வணங்கும் காப்புப் பருவம் முதற் பருவமாகும். குமரகுருபரர் முத்துக் குமாரசாமியாகிய குழந்தையைக் காக்கும்படித் திருமால் முதலிய பத்துக் கடவுளை வணங்கி யிருக்கிறார்.

குழந்தை கவிழ்ந்து கொண்டு நகர்வதற்கு முயற்சி செய்யும் ஐந்தாம் மாதத்தில், ஒரு காலை முடக்கி ஒரு காலை நீட்டி முழந்தாளையும், கைகளையும் ஊன்றித் தலை நிமிர்ந்து முகம் அசையும்படி ஆடச் சொல்வதாக வரும் செங்கீரைப் பருவம் இரண்டாவதாகும். கீரை துவள்வது போலத் துவண்டாடும்படிச் சொல்வதால் செங்கீரை எனப் பெயர் பெற்றது.

"ஒருதாள் உந்தி எழுந்துஇரு கையும்
ஒருங்கு பதித்து நிமிர்ந்து
அருள்பொழி திருமுகம் அசைய அசைந்தினிது
ஆடுக செங்கீரை"

என்று குமரகுருபரரும் பாடியிருக்கிறார்.

மற்றைப் பருவங்களாவன:—நாக்கை ஆட்டி ஒலி யுண்டாக்கும்படிச் செய்யும் தாலப்பருவம், இரு கைகளை யும் கொட்டும்படிச் சொல்லும் சப்பாணிப் பருவம், முத் தப் பருவம், வருகைப் பருவம், அம்புலிப் பருவம், சிற் றிற் பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப் பருவம் என்பனவாம்.

இப் பத்துப் பருவங்களுக்கும் குழந்தை பிறந்த மூன்றும் மாதம் முதல் தொடங்கி இரண்டிரண்டு மாதங் களாகச் சேர்த்துக் கால வரையறை கூறுவர் புலவர்.

பெண் குழந்தையைப் பற்றிய பிள்ளைத் தமிழாக இருந்தால் பின்னல் கூறிய சிற்றில், சிறுபறை சிறு தேர்ப் பருவங்களை நீக்கி, அம்மானை, நீராடல், ஊசல் என்ற மூன்று பருவங்களைச் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

இனி, நமது பிள்ளைத் தமிழிற் சில கருத்துக்களைப் பார்ப்போம். புலவர்கள் உலகியலும், கற்பனையும் கூறும் இயல்புடையவர்கள் என முன் சொல்லியிருக்கின்றேம். நமது குமர குருபரர் கூறிய உலகியல்களையும் கற்பனை களையும் காண்போம்.

உலகில் குழந்தையைப் பெற்றோர் அக்குழந்தைக்கு யாதொரு துன்பமும் நேராமல் பார்த்துக் கொள்வார் கள் அல்லவா? அவ்வாறு பார்த்துக் கொள்ளும் போது

அக்குழந்தையின் குறும்பால் தமக்குத் துன்பம் அதிக மாலுலும், அக்குழந்தைக்கும் துன்பம் வருமென எண்ணுவார்களாலுல், அதை நீக்கவே எண்ணுவார்கள். தத்தித்தத்தி நடக்கும் குழந்தையைக் கையில் எடுத்து வைத்தாலும், மடியில் வைத்தாலும் அது மார்பிலும், முகத்திலும், வயிற்றிலும் உதைத்துக் குறும்பு செய்யும்; அதலுல் வைத்திருப்போர்க்கு வலியும் உண்டாகும். அதைப் பாராமல், குழந்தையின் கால் வலிக்குமே; இரத்தம் கட்டிக் கொள்ளுமே என்றெண்ணி, உதைக்காதபடி கோல் கொண்டாவது வாயால் அதட்டியாவது பயப்படுத்துவார்கள் அல்லவா? இதனையே நம் குமரகுருபரரும் முத்தப் பருவத்தில் முத்துக் குமாரசாமியாகிய குழந்தையைப் பார்த்துக் கூறியிருக்கிறுர்.

"நறவு விரிந்த விரைத் தோட்டு
  நளினத் தொட்டில் தடமுலைப்பால்
நல்கி வளர்த்த கைத்தாயர்
  நகைவாள் முகத்தும் மார்பகத்தும்
குறுமென் நடைய சிறுபசுங்கால்
  குருதி ததும்ப உதைத்துசில
குறும்பு செயத்தாள் நோமென மென்
  கோல் கொண்டு ஒச்ச"

என்றுர். குழந்தையைக் கோலால் அதட்டும்போது அதனையும் ஒரு விளையாட்டாக எண்ணிச் சிரிப்பதும் உண்டல்லவா? அவ்வியல்பையும் மனதில் எண்ணிய குமரகுருபரர், முருகனுகிய குழந்தையும் கைத்தாயர் கோல்கொண்டு ஓச்சும்போது சிரித்ததாகக் கற்பித்துக் கொண்டு அதற்கொரு காரணமும் கற்பித்தார்.

"நாம் யார் என்பதை உணராமலே நம்மைக் கோலால் அடிக்க வருகிறார்களே, இந்தப் பெரிய உலகத்தையே படைத்துக் காக்கும் பெருமையை அவர்கள் அறிய வில்லையே! என்னே அவர்கள் அறியாமை" என்று நினைத்துச் சிரித்ததாகக் காரணம் கற்பித்தார். உலகியலோடு கற்பனையும் கலந்தது எவ்வளவு மகிழ்ச்சிக் குரியதாக இருக்கிறது!

உலகில் குழந்தைக்கு நிலவு காட்டி அதை அழைக்கும்படிக் கூறுவதும், தாயே அழைப்பதும் உண்டு அவ்வாறு அழைக்கும் போது அம்புலியே! இக் குழந்தையுடன் விளையாட வா வா என அழைப்பார். குழந்தைக்குச் சோறூட்டும் போது, "நீயும் வந்தால் சோறுண்ணலாம் அம்புலியே! வா." என அழைப்பார். பின் சிறிது கழித்து "அம்புலியே! வருகிறாயா இல்லையா. தம்பி விளையாட அழைக்கின்றான். இவன் உன்னைவிட நல்லவனுச்சே" என்றழைப்பார். கடைசியாக "நீ வாரா விட்டால் இவன் அடிப்பான்; ஆமாம்; வந்து விடு" என்று அழைப்பார். இவ்வாறு அழைப்பது குழந்தையின் அறிவுத் திறமைக்கேற்ப இருக்கும் இவைகளைச் சாம, தான பேத, தண்ட உபாயங்களால் அழைத்தல் என்பார்கள். குமர குருபரர் கூறிய இரண்டு உபாயங்களைக் காண்போம்.

"அம்புலியே! நீ வெளியில் காணப்படும் இருளை மட்டும் உன் ஒளியால் போக்குவாய்; இவனைப் போல மனதில் இருக்கும் அஞ்ஞான இருளைப் போக்க மாட்டாய். நீ ஆகாயத்தில்தான் இருந்து விளங்குவாய்; இவனைப் போல உலகம் எங்கும் தங்கி இருந்து விளங்க மாட்டாய்; நீ குமுத மலரைத்தான் மலர்த்துவாய்; இவனைப்

போல அன்பர் உள்ளமாகிய மலரை மலர்த்த மாட்டாய். சகோரம் என்ற பறவைக்கு மட்டுந்தான் உன் ஒளியைத் தந்து இன்பந் தருவாய்; இவனைப் போல எல்லா உயிர்களுக்கும் இன்பம் தரமாட்டாய். எனவே எவ்விதத்திலும் சமம் ஆகமாட்டாய். அப்படி யிருந்தும் இக்குழந்தை தன்னுடன் விளையாடும்படி உன்னை அழைக்கிறான். உன் தவமே தவம். வருக"

இவ்வாறு அழைத்தது பேத உபாயமாகும். தண்ட உபாயம் ஒன்று கூறுகின்றோம்.

"பிறவிக் கடலில் துன்பப்படும் என்னை முத்திக் கரையில் சேர்க்கவல்ல இக்குழந்தை, உனக்குத் திருவருள் செய்யவேண்டி அழைக்கவும் நீ வரவில்லை என்றால் இக்குழந்தை உன்னைக் கோபிக்காவிட்டாலும் கண் சிவந்து அழுவான். இவன் அழுவதை இளவீரனாகிய வீரவாகு கண்டால் உன்னைச் சும்மாவிடமாட்டான்" என்று கூறியிருக்கிறார்.

"தள்ளும் பவக்கடல் உழக்கும் எனைமுத்தித்
 தடங்கரை விடுப்பவன் உனைத்
தலையளிப்பான்வர வழைப்பவும் வாராவிடில்
 தண்ணளி சுரந்து கருணை
வெள்ளம் கொழிக்கும் கடைக்கண் சிவப்பஇவன்
 வெகுளாது விடினும் அழுது
விழிசிவப்பக் காணில் இரவிபகை சாய்த்தஇள
 வீரன் பொறுப்பானலன்"

என்ற அடிகளைக் காணலாம்.

இனி நமது குமரகுருபர அடிகளின் கற்பனைகளைக் காண்போம். இவரது கற்பனைகள் நகைச்சுவையுடையனவாகவும் அறிவுரை உடையனவாகவும் விளங்கும்.

"உழவர்ப் பெண்கள் தம் மகிழ்ச்சியால் குரவைக் கூத்து ஆடினார்கள். அவர்கள் கூத்து ஓசையை வயலில் இருந்த ஒரு பெரிய வாளைமீன் கேட்டுத் துள்ளி, மேகமும் திரைந்து போகும்படித் தாவி, தேவலோகம் சென்று அங்கு இருந்த ஒரு பசுவின் மடியை முட்டியது. அப்பசு சமீபத்தில் கன்று போட்டது. அதனால், அது, தன் கன்றுதான் பாலுக்காக முட்டியது என எண்ணிப் பாலை மிகுதியாகச் சொரிந்தது. அப் பால், அருவி போலப் பெருகிவரும் கற்பக மலர்த்தேனோடு கலந்து, பூமியில் வயித்தீசுரன் கோயிலில் விழுந்து, ஏரி குளங்களை நிரப்பியது. அதனால், அவ் ஏரி குளங்களால் பாசனங்கொண்ட வயல்கள் சேற்று வாசனை நீங்கித் தெய்வ மணங் கமழ்ந்தன. செந்நெல்' யாவும் கரும்பு என்னும்படிச் செழிப்பாக வளர்ந்தன.

இவ்வாறு வயித்தீசுரன் கோயில் என்ற ஊரைப் பற்றிக் கூறியிருக்கிறார். இதனால் அவ்வூரின் நீர்வளமும் வளையின் செழுமையும், மக்கள் மகிழ்ச்சியும் நமக்குத் தெரிவித்தார் அவர் காவிரி பாயும் சோழநாட்டைச் சார்ந்த ஊர் அல்லவா? சொல்லவா வேண்டும் செழுமைக்கு! இவ்வாறு நமக்கு நகைச் சுவையும் பொருந்தும்படிக் கூறிய அழகை எவ்வாறு வியப்பது!

வேறோர் இடத்தில் கற்பனையோடு அறிவுரையும் அருளியிருக்கிறார்.

உழவர்ப் பெண்கள் அணிந்திருந்த மாலைகளில் வண்டுகள் ஒலிக்க அவ்வோசையைக் கேட்டு மடுவில் இருந்த ஒரு வாளைமீன் துள்ளி, நீலநிறத்தோடு விளங்கிய ஆகாயத்தைக் கடல் என எண்ணித்தாவ, அங்கிருந்த ஆகாய கங்கையில் சென்று விழுந்தது! என்

றொரு கற்பனை கற்பித்து, அது எப்படி இருக்கிறது என்றால் "முத்தி யின்பத்துக்காகச் சிவபெருமானை யல்லாமல் வேறொரு தெய்வத்தை உண்மைத் தெய்வம் என்று கருதி அதை அடைய முயற்சி செய்வோர்க்கு, அவர் உணர்வில் சிவனே விளங்குவதால் முடிவில் சிவ முத்தி கிடைத்ததுபோல" இருக்கிறது என்று ஓர் உவமையும் தந்திருக்கிறார்.

"..............................கடைசியர்கள்
மாலைக் குழல்வண் டோலமிட
மடுவில் வெடிபோம் வரிவாளை
பள்ளத் திருள்தூங்கு அழுவநீர்ப்
பரப்பென்று அகல்வான் மிசைத்தாவப்
பாகிரதித் தீம்புனல் கிடைத்த
பரிசு, வீட்டின் பயன்துய்க்கும்
உள்ளக் கருத்தால் பிறிதொன்றை
உண்மைப் பொருள் என்றுள்ளவும் தம்
உணர்வில் தெய்வம் கடைக் கூட்ட
உறுதி கிடைத்த படிபோலும்"

என்பது அவர் பாடல். தமது சைவ சமயத்திற்கேற்ப இவ்வாறு சொன்னாராயினும், 'யாவரும் ஏதேனும் ஒரு கடவுளை மனதில் நினைந்து வழிபட்டால் உறுதியாகப் பலன் கிட்டும்' என்ற உண்மைப் பொருளையே நமக்கு அறிவுறுத்தினார் என்று கொள்ளுதல் வேண்டும்.

முருகனுக்கும் சூரபதுமனுக்கும் நடந்த போரினை மனதில் நினைத்தார் குமரகுருபரர். முருகன் பக்கத்துப் பூத கணத்தவர்களும், தேவ கணத்தவர்களும் சூரபதுமனைச் சார்ந்த அவுண கணத்தவர்களோடு போர்புரிந்தனர். பூதகணங்கள் அவுணர்களை வெட்டி வீழ்த்தினர்.

இதனை மனதில் வைத்து ஒரு கற்பனையை எழுப்பினர் அடிகள்.

"பூதத் தலைவர்கள் அவுணர்களை வெட்டினர். வெட்டுண்டு வீழ்ந்த அவுணர்கள் வீர சொர்க்கம் சேர்ந்தனர். போரில் புறமுதுகிடாது மார்பில் புண்பட்டு இறப்பவர் வீர சுவர்க்கம் அடைவார் என்பதன்றோ விதி? அம்முறையில் வீர சுவர்க்கம் அடைந்த அவுணர் போரில் இறந்து வருவோரைக் கூடி மகிழ்தற்கென்று, இருக்கும் தேவப் பெண்களுடன் கூடி மகிழ்ந்தனர். பின் கீழே பூமியைப் பார்த்தனர். அவர்கட்குச் சூரபதுமன் சண்டை காணப்பட்டது. இரத்த வெள்ளம் பாதாளத்தை நிரப்புவதும் தெரிந்தது. உடனே தாம் அவுணர்களென்பதையும் மறந்து, கீழே போர் புரியும் முருகனை விளித்து, "முருக! சூரபதுமனோடு அவுணர்களை அழியும்படிக் கொல்க. விரைவாகக் கொல்க" என வேண்டினர்.

இவ்வாறு கற்பனை எழுப்பினர். இக்கற்பனையில் நகைச்சுவையும் இருப்பதோடு ஓர் உண்மையும் உள்ளிடத்தில் மறைந்திருக்கிறது காணலாம்.

தவறு செய்த தன்னைத் தன் தந்தை அடித்ததை வெறுத்த மகன், தான் பெரியவனாகிக் குடும்பத்தில் ஈடுபட்டபின் தன் பிள்ளையின் தவறு கண்டு தண்டிக்கிறான். ஆசிரியர் விதித்த தண்டனையை வெறுத்த மாணவன், தான் ஆசிரியனாகிப் பின் தன் மாணவனுக்குத் தவறு கண்டு தண்டனை விதிக்கிறான். தன்னை அதிகாரம் பண்ணுவது குறித்து அதிகாரியிடம் வெறுப்புக் கொண்ட ஒருவன், தான் அவ்வதிகாரியாக ஆன போது தன் கீழுள்ளவரை அதிகாரம் பண்ணுகிறான்.

இவ்வாறே ஒவ்வொரு துறையிலும் காணலாம். இது உலகியல். இவ்வுலகியலே அடிகள் கற்பனையில் மறைந்திருக்கின்றது. தேவர்களுக்குத் துன்பம் விளைவித்த தவறு காரணமாகப் போர்க்கு வந்த முருகனையும், படையாளர்களையும் வெறுத்துப் போர் புரிந்த அவுணர்கள், தாம் வீரசொர்க்கம் அடைந்து தேவரானபின் தாம் யார் என்பதை மறந்து, முருகன் செயல் நல்லதே என்று கொண்டு அவுணர்களை அழிக்க வேண்டினர்'' என்ற கற்பனையில் முன்சொன்ன உலகியல் இல்லையென்று கூற முடியுமோ? இதன் மூலம் ஒருவர் நம்மை வெறுப்பாரேல் அவ்வெறுப்புக்குக் காரணம் சரியானதா தவறானதா எனச் சட்ட திட்டங்கட்கேற்ப ஆராய்தல் வேண்டும் என்பதை அறிகின்றோம் என்று கூறி நிறுத்துகின்றேம்.

---

## 2. காணும் உதவியும் காட்டும் உதவியும்

பெற்ற தாய் தன் குழந்தைக்குச் சோறூட்டுகின்றாள். குழந்தை சோறுண்டலைத் தன் விளையாட்டால் புறக்கணிக்கின்றது. தாய் எவ்வளவோ முயன்றும் பயனற்றுப் போகின்றது. பின் சிறிதளவு சோற்றினைத் தன் வாயில் போட்டு, 'இதோ நான் சாப்பிடுகின்றேன் பார்; நீயும் சாப்பிடு' என்று கூறுகிறாள். அதனைக் கண்ட குழந்தை தானும் சிறிதளவு சாப்பிடுகின்றது. இவ்வாறே அடிக்கடித் தானுண்டும் அல்லது ஒரு நாயினை அழைத்து அதனை யுண்பித்தும் தன் குழந்தையை உண்பிக்கின்றாள். தாயும் உண்கின்றாள்; குழந்தையையும் உண்பிக்கின்றாள்.

ஐந்து ஆண்டு அகவைச் சிறுவனுக்குப் பள்ளி ஆசிரியர் எழுத்தறிவிக்கும்போது, முதலில், தான், 'அ'

என ஒலிக்கின்றார். பின் சிறுவனை ஒலிக்கும்படிச் செய்கின்றார். முதலில் தான், 'அ' எழுத்தை எழுதிப் பின், அவனை எழுதச் சொல்கின்றார். ஆசிரியர் முதலில் தான் சொல்லியும் எழுதியும் பின், அவனைச் சொல்வித்தும், எழுதுவித்தும் வருகிறார்.

உடற்பயிற்சி ஆசிரியர்தான் உடற்பயிற்சிசெய்து, மாணவர்களையும் செய்விக்கிறார். நேர்ப்பயிற்சிப் படிப்பு (Practical Lessons) முழுமையும் இவ்வாறுதான் நடக்கின்றது.

"கொலை செய்யாதிருப்பாயாக; கள்ளுண்ணாதிருப்பாயாக; பொய் கூறாதிருப்பாயாக; சினம் கொள்ளாதிருப்பாயாக" என்பன போல அறவுரை கூறிய பெரியோர்கள், அவ்வாறு நடந்தும் காட்டினர். முறை தவறுதல் தீதெனப் பிறர்க்குரைத்த இளங்கோ வடிகள், தம் மூத்தவன்—செங்குட்டுவன் இருக்கத் தமக்கே யரசு பூணத்தக்க அறிகுறிகள் இருத்தலைக் கணிமகன் கூற்றால் அறிந்து, அதனைத் துறந்து, துறவு கொண்டனர் என நாம் வரலாறு காண்கின்றோமன்றோ?

"பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவிற்றிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே"

என்று பிறர்க்கறிவுறுத்திய அப்பர், அதற்கேற்பத் தாமே நடந்து காட்டுவாராய்த் தன்னெஞ்சினுக்கறிவுறுத்தும் முகத்தான்,

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடி
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடி
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே"

என்றனர்.

மேற்கூறியவற்றால் நாம் அறிவதென்ன? 'ஒருவரை ஒன்று செய்யும்படிக் கூறினால், அவர் அதனைச் செய்யச் சக்தியற்றவர் என்றால், மற்றவர் தாம் செய்து காட்டுதல் நல்லது' என்பதே யன்றோ?

உலகத்திலுள்ள உயிர்கள் அனைத்தும் ஒன்றையொன்று இன்றியமையாதனவாக இருக்கின்றன. உயிர்கள் மட்டும் என்ன? உயிரற்ற அஃறிணைப் பொருள்களும் மக்களுக்கும், மாக்களுக்கும், பிறவற்றிற்கும் இன்றியமையாதனவாகவே இருக்கின்றன. நிலம், நீர், தீ, வளி, வான் ஆகியவை உயிர்கட்கு எவ்வளவு இன்றியமையாதன என்று கூறவும் வேண்டுமோ? உலகத்தில் உள்ள அனைத்தும் ஒன்றற் கொன்று உதவி புரிவனவேயாம்.

ஆனால், அவ் வுதவிகள் பலதிறப்பட்டனவாகும். அவற்றினைப் பற்றுதல் காரணமாக உதவுவதும், அருள் காரணமாக உதவுவதும், யாதும் காரணம் இன்றி உதவுவதும் என முத்திறப் படுத்தலாம். தாய் குழந்தைக்கு உதவுவது பற்றுதல் காரணம் உதவுவதும். பெரியோர் அறவுரை மூலம் உதவுவது, அருள்

காரணமாகும். அஃறிணைப் பொருள்கள் உதவுவது மூன்றும் காரணம் ஆகும்.

ஒருவர் உதவ அதனைப் பிறிதொருவர் ஏற்பது உண்டு. ஒருவனுக்கு ஓர் உதவி புரிய எண்ணிச் சில பொருள்களை ஈந்தால் அவற்றை அவ் வொருவன் அடைகின்றான். ஆனால் ஈந்தவன் ஒன்றும் அடைவ தில்லை இதுவும் உதவியே. ஆனால், ஒருவனுக்கு ஓர் உதவி புரிபவன் அவனுக்கு மட்டுமின்றித், தானும் அவ்வுதவியினைப் பெறுதலும் உண்டு. அதுவும் உதவி தான். தாயும் ஆசிரியனும், பெரியோரும் பிறர்க்காக—குழந்தை—மாணவன், மக்கள் ஆகியவர்களுக்காக உதவி புரிய எண்ணிப் புரியுங்கால், தாமும் சோறுண் ணல், பயிலல், நடத்தல் ஆகியவற்றால் தமக்கும் உதவிக் கொள்ளுகிறார்கள். இவர்கள் தமக்கும் அவ்வாறு உத விக்கொள்ளவில்லையென்றால் அவர்களால் கருதப்பட்ட பிறரும் அவர்கள் உதவிகளைப் பெறமாட்டார்கள். இவர்கள் உதவியின் நோக்கம் பிறர்க்கென்பதைக் குறித் ததேயன்றித் தமக்கென்பதைக் குறித்ததன்று. எனவே தாய் தான் உண்டு குழந்தையை உண்பிப்பதால்—தாய் உண்டது கண்டு குழந்தை உண்பதால், தாயானவள் உண்டு உதவினாள்; உண்பித்துப் பசியடங்க உதவி னாள். ஆசிரியன் தான் ஒலித்து, எழுதி, உடற்பயிற்சி செய்துகாட்டி உதவினான்; அதனால், மாணவனுக்கு ஒலிப்பித்து, எழுதுவித்து, உடற் பயிற்சி செய்வித்து உதவினான். பெரியோர், தாம் நடந்து காட்டி யுதவினர்; மக்களையும் நடப்பித்தனர். இவ்வகையான உதவிகள், செய்யும் உதவி, செய்விக்கும் உதவி எனப்படும். இவ் வுதவிகளை அஃறிணைப் பொருள்களும் செய்கின்றன.

அவற்றை நாம் இன்னும் நன்ருக உணர்ந்து கொள்ளா மல் இருக்கின்ருேம். விஞ்ஞானத்தின் போக்கு அதனைப் போகப் போக விளக்கிக்காட்டும் என எதிர்பார்க் கலாம். ஈண்டு சூரியன் செய்யும் உதவியினைமட் டும் கண்டு அதனுல் விளங்கப் பெறுவதையும் எழுது கின்றேம்.

சூரியன் ஒளி தருகின்றது. சூரிய ஒளி எங்கும இயன்ற மட்டும் பரவுகின்றது. பிறர்க்கு எப்பொருளை யும் காட்டுகின்றது. ஆம்! தானும் காணுகின்றது; சூரிய ஒளியில்லையேல் மக்கள் உயிர்கள் ஒன்றினையும் காண முடியாது. விஞ்ஞானிகள் உயிர்களே வாழமுடி யாது என்று கூறிவிட்டார்கள். சூரியன் எவ்வெவப் பொருள்களைக் காண்கின்றதோ அவ்வப் பொருள்களை நாம்காண முடியும். கண்ணுள்ள அனைவரும் காணமுடி யும். ஆனல் கண்ணுள்ள அனைவரும் சூரிய ஒளி காணுப் பொருள்களைக் காணமுடியாது.

கார்த்திகை மாதம்; அமாவாசை இரவு; நல்ல காரிருள்; அதிலும் மேகம் மறைந்தஇருள். ஒருவன் தன் வீட்டிலிருந்து வெளிப்பட்டான் வேருெருவனும் அவ்வாறே வெளிவந்தான். இருவரும் வெவ்வேறு தெருவிலிருந்து வந்தனர். அதிலும் எதிர் எதிராக வந்தனர். வந்தவர் ஒருவரை ஒருவர் அறியாது முட்டினர். ஏன்? வந்த போதும் அடிக்கடிப் பழகிய தம்மூவரில்—தம்தெருவில், நடந்துவர நிதானமாகவே வந்தனர். எப்படி வந்தும் ஒருவரை ஒருவர் அறியாது முட்டினர். இருவருள் ஒருவன்; 'ஏன் கண்தெரியவில்லையோ' எனக்கடிந்தான். மற்றவன், தெரிந்த நீ தான் சற்று விலகிப் போகக்

கூடாதா?' என்றான். இருவரும் ஒருவரை ஒருவர் திட்டியவாறே சென்றனர்.

இவர்கட்குக் கண்கள் பழுதா என்றால் இல்லை. கண்ணாடிபோட வேண்டாத அப்பழுக்கற்ற கண்கள்; என் செய்வது? தெரியாமல் முட்டிக்கொண்டார்கள். அதே காரிருளில் விளக்குடன் ஒருவன் தன் விருப்பப்படி நடந்து யாதோர் இடையூறும் இன்றிச் சென்றான். இவனுக்கு உதவியது அவ் விளக்கு. கண்ணுக்குப் பார்வையிருந்தும் ஒளியின் உதவியின்மையால் அப்பார்வை பயனற்றதாயிற்று. முட்டிய இருவர் பகலில் முட்டிக்கொள்வாரோ? காரணம் பகலில் ஒளியுண்டு. அதனால் சூரிய ஒளி எங்கெங்கு செல்கிறதோ அங்கங்கு நம் கண் பார்வையும் செல்லும்; பொருள்களைக் காணும். எனவே, சூரியன் நமக்கு ஒலிமூலம் பொருள்களைக் கண்டு, நம் கண்களுக்குக் காட்டுகின்றது என அறியலாம். அதனால், சூரியன் நமக்கும் காணும் உதவியால் காட்டும் உதவியைச் செய்கின்றது என்பது பெறலாம். பகலிலும் கூட இருட்டறையில் ஒன்றும் காண நம்மால் முடிவதில்லை யென்பதையும் நாம் நினைக்கவேண்டும். அவ்விருட்டறையில் சூரியன் பார்வை செல்லவில்லை; நம் பார்வைக்கும் செல்லும் ஆற்றல் இல்லை.

அஃறிணைப் பொருளாகிய சூரியன் நமக்கு உதவி புரியுமுகத்தான் தானும் உதவி பெறவில்லை. தான் உணர்வுடனும் அவ்வுதவியைச் செய்யவும் இல்லை. என்றாலும் என்ன? மக்கள் அறிவுடையவர்கள். யார் எப்படி உதவினாலென்ன? உதவி உதவிதானே என எண்ணி, அஃறிணைப் பொருளாயினும்—தன் கடமையில் வழுவாது செல்வது இயற்கையாயினும் அப்

பொருளின் இயற்கை, மக்களுக்கு உதவியாயின், அதனை உதவியென்றே கொள்வர்.

சூரியன் தன் காட்சியால் பொருள்களைக் காட்டும் உதவிபோல, நம் கண்ணிற்குப் பிறிதொன்றும் உதவி செய்கின்றது. அது அவரவர் உளமே. உளம் பொருள்களைத் தான் காண்கின்றது; அதனால் கண்ணிற்கும் காட்டுகின்றது.

தெருவில் நடந்து போகிறான் ஒருவன். பட்டப் பகல் நேரம். நடப்பவனுக்கும் கண் நன்றாகத் தெரியும். தெருவைப் பார்த்தபடியே தான் நடந்து போகிறான். ஆனால் எதிரில் வருபவனோடு மோதித் திடீரென வெருண்டு பார்த்து, மன்னிக்க வேண்டும் என்று கூறி நடக்கின்றான்.

இவன் இவ்வாறு கண்ணிருந்தும் கபோதியாயினமைக்குக் காரணம் என்ன? கருத்தின்மையே. இவன் மனம் எங்கேயோ சென்றிருக்கவேண்டும். அதனால், தெருவில் சென்றும் கூடத், தெருவில் வருபவனைக் காணவில்லை கண். மனம்—உள்ளம் கண்ணில் இருந்திருந்தால் கண் கண்டிருக்கும். எனவே, உள்ளம் எதைக் காணுகின்றதோ கண்ணும் அதைக் காணும்; உள்ளம் இன்றிக் கண் காணாது; அதனால் கண்ணுக்கு உள்ளம், தான் காணும் உதவியினால் காட்டும் உதவியினைச் செய்கின்றது என்பது நாம் அறியலாம்.

"எத்தனை தடவை கூப்பிடுவது? காது கேட்கவில்லையோ" என்று ஒருவன் அண்மையில் ஏதோ சிந்தித்துக்கொண்டிருந்த ஒருவனிடம் வினவுவதும், அதற்கவன் "இல்லை; மனம் என்னென்னமோ எண்ணிக்கொண்

டிருந்தது; அதுதான் கேட்கவில்லை; ஏன்? என்னசெய்தி?" என்று கூறுவதும் அடிக்கடி நிகழ்வதைக் காணலாம். மனம் காதுவழி நில்லாமையால்—மனம் முதலவன் விளித்ததை உணராமையால், பின்னவனுக்குக் காதும் கேளாதாயிற்று. மனம்—உளம் கேட்டிருக்குமாயின் காதும் கேட்டிருக்கும். முதலவன் இறுதியில் சற்று உரத்த ஒலியில் அழைக்கவே, முதலில் எங்கேயோ திரிந்த உளம், கேட்டுத் திரும்பிய பின்னரே காதும் கேட்டது. எனவே, உளம் கேட்கும் உதவியால் காதுக்குக் கேட்பிக்கும் உதவியைச் செய்தது என்னலாம். இவ்வாறே ஒவ்வொரு பொறிகளுக்கும் உளம் உதவுகிறது.

உள்ளம் என்பது யாது? உள்ளம் என்பதற்கு உள்ளுதல்—ஊன்றி எண்ணுதல்—கருதுதல் என்பது பொருள். அவ்வாறு உள்ளுவதற்குக் கருவியாய் இருப்பது உள்ளம் எனப்பட்டது, நோக்குதற்குக் கருவியாய் இருக்கும் கண் நோக்கம் எனப்பட்டதுபோல உள்ளுவதற்குக் கருவி அறிவு. அவ்வறிவு உயிருக்குள்ள குணம். அதனால் உளம் கண்ணுக்குக் காட்டியது என்றால் உயிர் காட்டியது என்னலாம் அன்றோ? எனவே, உயிர் பொருள்களைத்தான் முதலில் கண்டு பின் கண்ணிற்குக் காட்டும் என அறியலாம். இவ்வாறே ஏனைய பொறிகளுக்கும் கொள்ளவேண்டும்.

சைவ சித்தாந்திகள் ஈண்டொரு சித்தாந்தத்தை மேற்கொண்டனர். "காணும் கண்ணுக்குக் காட்டும் உளத்தை" உவமையாகக் கொண்டனர். இதுகொண்டு ஒரு பெரிய கருத்தை விளக்கினர்.

"இறைவன், உயிர், மலம் (பதி, பசு, பாசம்) இம் மூன்றும் எப்போதும் அழியாதன. உயிர், மலம் நீங்கி இறைவனை அடையவேண்டும். இறைவன் அதற்கு அருள் புரிவன். அவ்விறைவனை அடைதற்கு மூன்று வழிகள் உள. நேராக இறைவனை உருவவடிவில் வழி படுதல், இறைவன் அடியாரை வழிபடுதல், குருவை வழிபடுதல் என்பன அவை. இம்மூவரும் இறைவனை யெய்துவிப்பர் என்பர். குரு இறைவன் உருவமாகவே கருதப்படவேண்டியவர். அவர் இறைவனைக் காண்பவர். பின் உயிருக்கு—பிறர்க்குக் காட்டுபவர். அவர் வழிச் சென்று இறைவனை யடையலாம்." இவ்வாறு சைவ சித்தாந்திகள் கூறுவர். உளம்போல—உயிர்போலக் குரு விளங்குவர் என்பர் அவர்கள். அதனால், காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போலக் குரு காணும் உயிர்க்கு—ஆன்மாவிற்கு இறைவனைக் காட்டுவர் என் பார்கள். அவர்கள் கூறும் ஒரு செய்யுளைக் கீழே தருகின்றோம்.

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே"

(சிவஞானபோதம் 11 சூத்திரம்)

இஃது சிவஞான போதப் பதினோராம் பாடல்.

"உருவத்தைக் காணத் தகுதியுடைய கண்ணுக்கு, அது காணும்படியாக முதலில் தான் அதனைக் கண்டு பின் காட்டுகின்ற உளம்—ஆன்மாவைப் போல உண்மைப் பொருளாகிய கடவுளைக் காணத் தகுதியுடைய அவ் வான்மாவிற்குக், காணும்படியாகக் குருவானவன், முத லில் கடவுளைக் கண்டு பின் காட்டுதலினால் அவ்வான்மா

சோராத அன்போடு இருந்து சிவன் கழல் செல்லும்" என்பது இதன் பொருள்.

இதுகாறும் கூறியவாற்றால் உலகத்து உயிர்கள் ஒன்றை ஒன்று இன்றியமையாதனவாக இருக்கின்றன என்பதும், அஃறிணைப் பொருள்களும் மக்களுக்குதவு கின்றன என்பதும், சூரிய ஒளிகண்டு காட்டும் உதவி யினையும், உயிரும் கண்டு காட்டும் உதவியினையும் கண் ணுக்குப் புரிகின்றன என்பதும், இவ்வுயிர்போலவே குரு உயிர்க்குக் கடவுளைக்கண்டு காட்டுவர் எனச் சைவ சித் தாந்திகள் கூறுவர் என்பதும் போதரும்.

# 3. விதியின் பிழை

"ஏனக்கென எங்கிருந்து வந்தானே பாவி! தெரிய வில்லையே! இவன் வரவில்லை யென்றால்— இவன் குறுக்கிடவில்லை யென்றால்—இப்போது யான் ஒரு பெரிய பதவியை அடைந்திருப்பேனே! கைக் கெட்டியதை வாய்க்கெட்டாமல் செய்துவிட் டானே! இவனுக்கு யான் யாதொரு தீங்கும் செய் தறியேனே! இன்னும் சொல்லப்போனால் இவ னுக்கு வந்த ஆபத்தையும் ஒருகாலத்தில் நீக்கி யிருக்கின்றேனே! இந்த நன்றி கெட்ட கொடி யனை.......சமயம் வரட்டும் பார்த்துக்கொள்ளுகி றேன்"

இவ்வாறு தனக்குக் கிடைக்க இருந்த ஒருபதவி ஒருவ னால் தடைப்பட அவனை நினைந்து வருந்திச் சினம் கொள் ளும் ஒருவனிடம், அவன் நண்பன், அவனைத் தேற்றுங் காலத்தில்,

"நண்பனே! வருந்தாதே. அவனைச் சபித்து என்ன பயன்? அவன் குறுக்கிடாதிருந்தால் உனக்குப் பெரிய பதவி வந்திருக்கும் என்பது உண்மைதான். அப்படி அவன் குறுக்கிட்டதுகொண்டு அவனைக் கோபிப்பதில் பயனில்லை அவன் குறுக்கிடும்படி நம் விதி செய்த சதி இருக்கும்போது நாம் என்ன செய்ய முடியும்? எல்லாம் விதிப்படிதானே நடக்கிறது. கவலையை விடு. அடுத்த வாய்ப்பு வரும் போது முன்னெச்சரிக்கையாய் இருப்போம்"
என்று தேறுதல் கூறுவான்.

ஒருவனுக்கு இடையூறு நேர்ந்தால் அவ்விடையூறு நேர்தற்குக் காரணமாக இருந்தவரிடம் சினம் கொள்வதும், பிறர் அச்சினத்தினை விதியின் காரணம் காட்டி ஆற்றுவதும் இயல்பு. பிறர் அவ்வாறு ஆற்ற ஆறுவதை விடுத்துத் தாமே அறிந்து ஆறுவது அறிவுடையோர் செயல். இப்பிறப்பில் ஒருவன் நற்குண நற்செய்கைகள் உடையவனாக இருக்கின்றான் என வைத்துக்கொள்வோம். அவன், 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் இயல்பினன்; தன்னை வியந்து செருக்காமல் பணிந்துகொள்ளும் பெருமையன்' என்றெல்லாம் பிறர் கூறும்படியாக வாழ்பவன். அத்தகையவனுக்கே மேலும் மேலும் துன்பங்கள் வருகின்றன. இவனுக்கு மாறானவன் ஒருவன், அவ்விய நெஞ்சத்தான்; தீயனவற்றிற்கு இருப்பிடமானவன். அவனுக்கு மேலும் மேலும் செல்வங்கள் வந்து குவிவதும் அவன் எண்ணங்கள் யாவும் நிறைவேறுவதுமாக இருக்கின்றன. இவ்வாறு மாறுபட்ட நிலையில் உலகில் அமையக் கார

ணம் என்ன? இதன் காரணத்தை வள்ளுவர் ஊழ் என்பர்.

"அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்"

இது அவரது வாக்கு. வள்ளுவர் 'ஊழ்' என்றார் இலர். தீயோன் வாழான்; நல்லோன் தாழான். ஆனால் இம்முறைக்கு மாறு படவும் உலகில் உண்டு. தீயோன் வாழ நல்லோன் தாழ இருக்கும் நிலைக்குக் காரணம் கண்டுபிடித்துக் கூறவேண்டுமே யன்றித் திடீரெனக் கூறிவிட முடியாது. "தினை விதைத்தவன் தினையறுப் பான் வினைவிதைத்தவன் வினை யறுப்பான்" என்பது பழமொழியன்றோ? அப்படியானால் தீயோன் தீமை தானே யனுபவிக்க வேண்டும்? நல்லோன் நன்மை தானே அனுபவிக்கவேண்டும்? மாறானது ஏன்? நினைக்க நினைக்கவே காரணம் புலப்படும். தீயோன் தீமை செய் ததும் நல்லோன் நன்மை செய்ததும் இப்பிறப்பிலே. இவ்விருவரும் இப்பிறப்பில் செய்தனவற்றை அனு பவிக்க இப்பிறப்பேயன்றி மறுபிறப்பும் தேவை. அங் ஙனமாயின் இவ்விருவரும் சென்ற பிறப்பில் செய்தன வற்றை அனுபவிக்க அப்பிறப்பும் எஞ்சியனவற்றை அனுபவிக்க இப்பிறப்பும் தேவையன்றோ? அதனால் அப்பிறப்பில் செய்த நன்மை தீமைகளை இப்பிறப்பில் அனுபவிக்கின்றனர். அதனால் தீயோன் நன்மையும் நல்லோன் தீமையும் அனுபவிக்கின்றனர் என நாம் முடிவிற்கு வருதல் வேண்டும். இம் முடிபு, காரணம் 'ஊழ்' எனக் கூறும். இவ்வாறு நினைத்து முடிபிற்கு வர வேண்டுமாதலின் வள்ளுவர், அவ்விய நெஞ்சத்தான் ஆக்கத்திற்கும், செவ்வியான் கேட்டிற்கும் காரணம்

'ஊழ்' எனக் கூறிவிடாமல் 'நினைக்கப்படும்' என்றார். என்னே வள்ளுவரின் வாக்கின் நயம்!

எனவே இடையூறு பிறரால் உற்ற ஒருவன், அவனை நோவாமல் விதியையே நோதல் வேண்டும் என்பது பெறலாம். இக்கருத்தினை இராமன் தன் தம்பி இலக்குவனுக்கு உணர்த்திய வகையினைக் காண்போம்.

அயோத்தியில் ஆண்ட தசரதன், தன் நரை மயிர் ஒன்றினைக் கண்ணாடியால் கண்டதும் தன் அரசினை, மந்திரச் சுற்றங்களுடன் ஆய்ந்து, முதல் மகன்—அரசு பெறும் முறை மகன்—ஆளும் திறன் வாய்ந்த அருமை மகன் இராமனுக்குக் கொடுத்துத் தான், வனம் சென்று தவம் இருக்கக் கருதி ஆவன செய்யும் காலத்தில், கூனியால் மனம் திரிக்கப்பட்ட கைகேயி, தசரதனிடம் 'தன் மகன் பரதன் ஆளவேண்டும்; இராமன் பதினான்காண்டுகள் கானம் சென்று கடுந்தவம் கொள்ளவேண்டும்'' என வேண்டி வரம் பெற, அதனால் இராமன் தவக்கோலம் கொண்டு புறப்படும்போது இதனைக் கேள்வியுற்ற இலக்குவன் கடுங்கோபம் கொண்டு,

"சிங்கக் குருளைக்கிடும் தீஞ்சுவை யூனைநாயின்
வெங்கண் கடுங்குட் டியையூட்ட விரும்பினாளே
நங்கைக் கறிவின் திறம் நன்றிது நன்றிதெனாக்
கங்கைக் கிறைவன் கடகக்கை புடைத்து நக்கான்"

(கம்ப. அயோ. நகர். 117)

அத்துடன் அன்றிப் பலவாறாகப் பேசிக்கொண்டு "பெண்ணாட்டம் ஒட்டேன் இனி இப்பேருலகத்துள்" என்றும் கூறித் திரிந்தான். இவன் ஆர்ப்பாட்டம்

கேட்ட இராமன் விரைந்துவந்து அதன் காரணம் வினவினன், இலக்குவன்,

"மெய்யைச் சிதைவித்துநின் மெய்ம்முறை நீத்தநெஞ்சம்
மையிற் கரியாளெதிர் நின்னைநன் மௌலி சூட்டல்
செய்யக் கருதித்தடை செய்குநர் தேவரேனும்
துய்யைச் சுடுவெங் கனலிற்சுடுவான் துணிந்தேன்"

(கம்ப. அயோ. நகர். 127)

என்றனன். இராமன் அமைதியாக, "நீதி வளையா வரு நன்னெறி நின்னறி வாகுமன்றே" அங்ஙனமிருக்கவும் சீற்றம் உனக்கு விளைந்தது யாங்ஙனம்? என்றனன். அதற்கு இலக்குவன், உன் தந்தை இவ்வரசு உனக்கென்று சொல்லவும் அதனைப் பகை காரணமாக இழந்து வனம் போகின்றாய் என்றால் எனக்குச் சீற்றம் வாராதோ? எனக் கூறிப் பின்னும், "நின் கண் பரிவில்லவர் நீள்வனத்து உன்னைப் போக்க"வும் உயிர் வைத்திருக்கின்றேனே! யானே "அரசு உனதென்று கூறிப் பின் இல்லையென்ற அரசனுனேன்" என வருந்தினான். உடனே இராமன் பின் வருமாறு கூறினான்.

"தம்பீ! நீ என்மீது கொண்ட அன்பினால் பிறர் மீது குற்றம் சுமத்துகின்றாய் யாவர் குற்றமும் இல்லை, யான் முடி கவிக்காமைக்கு என் குற்றமேயாகும். பின்னால் மிகவும் துன்பம் தரும் இவ்வரசாட்சி என்பதையுணராது, அரசன், 'அரசுகொள்க' என்றவுடன் ஏற்றுக்கொண்டது என் குற்றமன்றோ? இதில் பிறர் குற்றம் யாதுளது?" என்றான் பின்னரும் சிந்தித்து, "அரசு துன்பம் தரும் என உணர்ந்த யானே அதற்கு இசைந்தேன் என்றால்—என் அறிவும் மயங்கியது என்

றால் அதற்குக் காரணம் யாதென எண்ணுகின்றாய்? ஊழே காரணமாகுமன்றோ?

"நதியின் பிழையன்று நறும்புன லின்மை யற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப்பு ரந்தாள்
மதியின் பிழையன்று மகன்பிழை யன்று மைந்த
விதியின் பிழைநீ யிதற்கென்னை வெகுண்டதென்றான்"

(கம்ப. அயோ. நகர். 133)

இராமன் இவ்வாறு கூறித் தம்பியைத் தேற்ற முயன்றான். இக்கூற்றினைச் சற்று விரிவாகக் காண்போம்.

இலக்குவன், இராமனுக்கு, முடிசூட்டுவதாகக் கூறிப் பின் வனம் ஏக ஒப்பிய தசரதனையும், அவ்வாறு வேண்டிய கைகேயினையும், அம்முடியைப் புனைவாளும் பரதனையும் குற்றம் உடையவர்களாகக் கருதிச் சீறினான். அதனால் அவர்கள் யாவரும் குற்றம் உடையவர்கள் அல்லர் என நிறுத்த எண்ணினான் இராமன். அதற்கோர் உவமையினையும் மேற்கொண்டான். எக்காலத்தும் ஓடும் இயல்பின்றி எப்போதேனும் ஓடும் நீரையுடைய யாற்றினை உவமையாகக் கொண்டான்.

தசரதன் சிறந்த அரசன். முறை தவறாதவன். "வெய்யவன் குல முதல் வேந்தர் மேலவர், செய்கையில் ஒருமுறை திறம்பலின்றியே, வய்யம் ஆண்டவன்" தன் முதுமை கண்டு இனி மறுமைக்கு உறுதிதேட எண்ணியதும், அதனால் மந்திரச் சுற்றம் அழைத்து சபைகூட்டி அவர்களிடைத்தான் துறவுகொள்ள எண்ணியதை நயமான முறையில் கூறியதும் நோக்கின், அவனது நேர்மையும் குணநலங்களும் புலப்படும். தசரதன் கருத்தினைக்கேட்ட சுமந்திரன் எழுந்து,

"உறத்த கும்மர சிராமற்கென் றுவக்கின்ற மனத்தைத்
துறத்தி நீயெனும் சொற்சுடும் நின்குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கன்று
அறத்தி னூஉங்கினிக் கொடிதெனை லாவதொன் றியாதே"

(கம்ப. அயோ. மந்திர. 46)

என்று கூறியதால் மந்திரச் சுற்றம் அரசன்பால் எவ்வளவு மதிப்பும் அன்பும் கொண்டிருந்தது என்பதை உணரலாம். இவ்வன்புக்கும் மதிப்புக்கும் அரசனின் செங்கோல் ஆட்சியன்றோ காரணம்? இவ்வாறு அறநெறி வழாது வந்த அரசன் பிழை புரிவானோ? எட்டுணையும் புரியான். அரசு மூத்த மகனுக்கே யுரியது என்ற முறையில் ஒரு சிறிதும் மாறுபடான். வழிவழி வரும் முறையை மறப்பனோ? முதல் மகன் இராமன் இருப்ப அரசினைப் பரதனுக்குக் கொடுக்க மனம் இசைவானோ? கைகேயி, அரசனிடம் 'என் மகன் ஆள இராமன் வனம் ஏக வேண்டும்' என்று வேண்டியபோதும்,

"கண்ணே வேண்டுமெ னினும் ஈயக் கடவேனென்
உண்ணே ராவி வேண்டினும் இன்றே யுனதன்றோ
பெண்ணே வண்மைக் கேகயன் மானே பெறுவாயேல்
மண்ணே கொள்நீ மற்றைய தொன்றும் மறவென்றான்"

(கம்ப. அயோ. கைகேசி 28)

'இராமனைக் காட்டிற்குச் செல்லவேண்டும் என்ற வரத்தினையாவது கேளாது விடுக' எனக் கூறிய அரசன், இராமனுக்கு முடிசூட்டத் தவறுவனோ? இராமன்பால் எவ்வளவு பற்றுதல் வைத்திருக்கின்றான் என்பது நன்கு விளங்குகின்றதன்றோ இப்பாட்டினால்?

அப்படியானால் அவன் இராமன் காட்டிற்கேகவும் பரதன் நாட்டையாளவும் வரம் கைகேயிக்கு ஈந்த

தேன் ? மனதோடு ஈந்தான் அலன். வற்புறுத்தப்பட்டு வேறு வகையின்றி ஒருகால் சொன்ன சொல்லைக் காக்க வேண்டி ஈந்தான். சம்பராசுரன் என்பானுடன் நடத்திய போரில் தனக்குத் தேர்ப்பாகன் நிலையில் இருந்து தேர் நடத்தி வந்த கைகேயினுக்கு, அப்போரில் வெற்றி கண்ட பின், 'நினைவுக்குவேண்டியபடி இரண்டு வரம் கேள் தருகிறேன்' என்றனன் தசரதன். அதற்கவள் 'இப்போது தேவையில்லை வேண்டும்போது கேட்கின்றேன்' என்றனள். அவ்வரம் இப்போது கேட்கப்பட்டன. அதனுல் தசரதன் இராமன் முடியிழந்து வனம் ஏக வரம் ஈந்தனன். தருமசங்கடமான நிலையில் அகப்பட்டுத் தத்தளித்தான் அரசன். ஒருபால் முறையும் மகன்பால் வைத்த அன்பும் ஈர்க்க, மற்ருெருபால் வரம் தருகிறேன் என்ற வாக்குத் தந்தது ஈர்க்கத் துன்புற்ருன் முடிவில் சொல்லைக் காக்கவேண்டி மனம் உடைந்து வரம் ஈந்தான்.

மூத்தவற்கு அரசு உரித்து என்னும் முன்னோர் நெறிமுறை, கைகேயிக்குத் தந்த வாக்கு என்ற இவற்றிடைப்பட்ட வேந்தன் முன்னோர் நெறி முறைப் பக்கம் சார்ந்து வரம் கொடா திருந்திருக்கலாகாதோ என்று வினவலாம். உலகம் பழிதூற்றும். வாக்கிழந்தான் என்று பழிபெறுவதைவிட நெறிமுறை தவற நேர்ந்தது என்பது அவ்வளவு பழியன்று. பழியாவும் கைகேயியையே சாரும் அன்ரே? அன்றியும் அவன் செய்த ஒரு வினை அவ்வாறுதான் சாரச்செய்யும். அவ்வினையினை அவனே கோசலையிடம் கூறினுன். இராமன் அரசிழத்தற் கன்றிக் கானேகுதற்கு அதுவே காரணம்.

"யான் வேட்டையாட ஒரு காட்டிற்குச் சென்றேன். ஒரு பெரிய யானை வந்தது கண்டேன். அம்பெய்ய மறைந்து நின்றேன். யானை அருகில் இருந்த ஆற்றை நோக்கிச் சென்றது. அம்பெய்தேன் அவ்வம்பு ஆங்குசென்ற ஒரு முனிவன் மகன்மேல் பாய அவன் அலறி வீழ்ந்தான். சென்று பார்த்தேன். அவன் கண்ணிழந்த முனிவனுக்குக் கண்ணாய் விளங்கியவன் என உணர்ந்தேன். பெற்றோர்க்குப் புனல் கொள்ளவந்தான். அவனை எடுத்து அவன் சொல்ல முனிவனிடம் சென்றேன். அவன் இறந்தான். புத்திர சோகம் தாங்காது முனிவனும் அவன் மனைவியும் புலம்பினர். அம்முனிவன் என்னை நோக்கி, யான் எவ்வளவு சமாதானம் சொல்லியும் கேளாது "மகவைப் பிரிந்து இன்று எம்போல் இடர் உற்று நீயும் இறப்பாய்" எனச் சபித்தனன். அச்சாபம் இப்படி விளைந்தது." என்றான் அரசன் கோசலையிடம்.

இதனால்தான் இராமன் வனம் ஏக வேண்டியதாயிற்று, எனவே, அவன் முன் செய்தவினை இங்ஙனம் வந்து மூண்டது. ஆதலின் இராமன் 'பதியின் பிழையன்று' என்றான்.

இன்று உலகம் யாரைப் பழிக்கின்றது, இராமன் முடியிழந்தமைக்கு? கைகேயியையன்றோ?" தீயவை யாவையினும் சிறந்த தீயாள்" எனக் கம்பரே இகழ்கின்றாரே!" வசை வெள்ளம் நீய்ந்தாய் நீய்ந்தாய் நின்மகனோடு நெடிது" எனத் தசரதன் கூறியதற்கேற்பப் பழியினை மேற்கொண்டாள் கைகேயி சிறந்த குணத்தினள்.

கூனியின் சூழ்ச்சியால் மதிமருண்டு விட்டாள். கூனி பலவாறாக இவள் மனதைத் திரிக்க முயலும்

காலத்தில், இவள் அவளிடம் வெகுண்டு கூறியனவும், முறை நெறியாகக் கூறியனவும் இவளது நெறி பிறழாக் குணத்தினைக் காட்டும். அவ்வளவு கூறுவானேன்? இராமனிடமே பெரிய அன்பையும் வைத்திருந்தாள் என்பதை, "இராமனுக்கு முடிசூட்டு விழா நடைபெறும் நாளை'' எனக் கூனி முதலில் விரைந்து வந்து கூறியவுடன் அவட்குத் தன் கழுத்திலிருந்த முத்து மாலையினை யீந்தாள்' என்றதால் அறியலாமே! அத்தகையாள் மாறுபட்டாள் என்னின்—அவள் அறிவு திரிந்தது என்னின் அதற்குக் காரணம், அவள் அல்லள்—அவள் அறிவும் அன்று என்னலாம். அவள் அறிவினைத் திரித்தவள் கூனி. அவள் திரிக்கக் காரணம் இராமன் பால் அவள் கொண்ட வெறுப்பு. அவ்வெறுப்பின் காரணம், இராமன் சிறுவயதில் தன் வில்லை வளைத்து விளையாட்டாகக் கூனியின் கூன் முதுகில் அம்பையெய்ததுதான். சிறுவனுக்கு விளையாட்டு. ஆனால் கூனிக்கு வலி. விளையாட்டு பின் வினையாயிற்று. அதனால் கூனி மனம் திரித்துவிட்டாள். எனவே இராமன் செய்த வினையே இங்ஙனம் மூண்டது. அதனால், இராமன் கைகேயியின் பிழையன்று என்றான். இராமனும் கைகேயியைப் பற்றிக் கூறும்போது "பயந்து நமைப் புரிந்தாள்" என்று அவளை உயர்த்திக் கூறியதோடன்றி, 'அவள் பிழையன்று' என்னாமல், அவள் 'மதி'யின் பிழையன்று என்றும் கூறியது கருதத்தக்கது.

இலக்குவன் பரதனை 'நாய்' என இகழ்ந்தான். பரதனும் குற்றவாளி என எண்ணினான் அவன். அவனும் குற்றவாளியல்லன். இராமனுக்கு முடிசூட்டப்போகும் செய்தியே யறியாதவன் அவன். இப்பேச்சு நிகழ்ந்த

காலத்தில் தன் தாய்ப் பாட்டன் வீட்டில் இருந்தான். அவன் நல்ல குணத்தினனுங்கூட இராமன் காடு சென்றதறிந்து அவனைத் தேடி மீட்டும் நாட்டையாளச் செய்ய எண்ணங்கொண்டு கங்கையையடைந்த பரதனை, முதலில் தவருக எண்ணி வெகுண்ட குகன், பின் அவன் எண்ணம் அறிந்தவுடன்,

"நம்பியுமென் னாயகனை ஒக்கின்றான் அயல்நின்றான்
தம்பியையும் ஒக்கின்றான் தவவேடம் தலைநின்றான்
துன்பமொரு முடிவில்லைத் திசைநோக்கித் தொழுகின்றான்
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்
[பென்றான்"

(கம்ப. அயோ. குக. 30)

எனின் பரதன்பாற் குற்றம் சாட்டுதற்குளதோ? அதனால் நம் இராமன், 'பரதன் பிழையன்று' என்றான்.

எனவே, தந்தை, தாய், பரதன் ஆகிய மூவர்பாலும் பிழையில்லை. இவர் அரசுமுறை கோடற்குக் கருவிகளாயினரேயன்றி வினைமுதல்களாயினர் இலர். எய்த வனை நோவாது அம்பினை நொந்தென்பயன்? இவர்களை இவ்வாறு மாறுபடச் செய்தது மேலை விதியேயாகும். அதனால் அதன் பிழையே யன்றி வேறன்று. சில யாறுகளில் எப்போதும் நீரோடுவதில்லை சிற்சில சமயத்தில் அதுவும் சிலமணியளவில் நீரோடி வடிந்துவிடும். அதனால் அவ்வாறுகள் குற்றம் உடையனவாமா? மழையின்மையால் நீரில்லை, அவ்வளவேயன்றோ! அதுபோல விதி இராமன் ஆளும்படி இல்லை; அதனால் அம்மூவரும் முறை தவறுமாருயிற்று.

விதியாவது ஊழ்வினை. ஒருவன் செய்தவினை பின்னர் அவனுக்குப் பயனாக வந்து விளைவதுவே விதி எனப் படுவது. அது நல்லதாயினும் தீயதாயினும் தன்வேலையை

ஒழுங்காகவே செய்து நிறைவேற்றும். "ஊட்டும் ஊழ் எங்குற்ருலும் உறுத்து வந்தூட்டிடாதோ" என்ருர் சிவப்பிரகாசர் எனவே தன் வேலையை ஒழுங்காகச் செய்யும் விதியினைக் குற்றம் உடையது என்னலாமோ? இக்கேள்வி சரியான கேள்வியே. ஒருவன் செய்த செயல் தான் பின் பயன் தரும்போது விதி எனப் பெயர் பெறுகின்றது. அதனுல் அவன் காரணமாக இருக்க அதை விடுத்து விதியினைக் குறைகூறுவது தவறுதான். ஆனுல் உலகில் ஆய்ந்துகூறும் இயல்புடையர் இலர். கண்ணிற்குப் பட்டதையே கொண்டு முடிபினைக் கூறுவோரே பெரும்பாலார். அதனுல் ஒருவனுக்கு யார் மூலம் தீயது நேர்கின்றதோ அவரையே அதற்குக் காரணராகக் கூறிவிடுவர்.

ஆற்றில் நீர் ஓடவில்லையென்ருல் அவ்வாற்றினைத் திட்டுவர், பழிப்பர். தன்னுலேயே தனக்கொரு தீங்கு நேரும்போது அது பிறன் வழியாக நேருமாயின் அவனையே பழித்தல் உலகியல். அவ்வாறே ரயில் தவறியது. கார் தவறியது என்றெல்லாம் கூறுவதன் காரணத்தை நாம் கூர்ந்து நோக்கின் தன் தவறினை ஒன்றின் மேலிட்டுக் கூறும் இயல்பு உலகினர்க்குண்டென்பதை உணரலாம். அவ்வாறே விதி தன் காரியத்தைச் செய்ததாயினும் அதனை உண்டாக்கிக்கொண்ட ஒருவனே காரணனுயினும் அவ்விதியே புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் உரியதாகும். அதனுல் இராமன் அனைவர் பிழையும் அன்று என்றவன் தன்பிழை என்னுமல் விதியின் பிழையென்ருன்.

இவ்வாறு 'விதியின்பிழை' என்பதைக் கூறி இலக்குவன் சீற்றம் அடங்க விரும்பினுன்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றென்று
சூழினும் தான்முந் துறும்"

# *4. பாட்டோவியம்

ஓர் இயற்கைக் காட்சியினைக்கண்டு அதனை அப்படியே திறமையாக வரைந்து விடுவான் ஓர் ஓவியன். அக் காட்சியினைத் தன் திறமையால் விளங்க வைப்பான் ஒரு பேச்சாளன். அதனையே தன் புலமைத் திறமை யால் பாடலாகப்பாடி உணர்ந்து உணர்ந்து இன்புற வைப்பான் ஒரு புலவன். அப்புலவன் பாடும் பாடலைக் கொண்டு ஓர் ஓவியம் வரையலாம் எனின் அப்பாடலை, ஓர் ஓவியம் என்னலாம் அன்றோ? பல இயற்கைக் காட்சிகளைப் பல தமிழ்ப் புலவர்கள் பலவாறாகப் பாட் டோவியப் படுத்தியிருக்கிறார்கள். அவருள் சேக்கிழார், கம்பர், திருத்தக்க தேவர், இளங்கோவடிகள் ஆகியவர் களின் ஓவியங்கள் ஒவ்வொன்று காண்போம்.

**சேக்கிழார்:**—திருஞானசம்பந்தர் புராணம் பாட வந்த சேக்கிழார் அவரது ஊராகிய சீகாழியைப் பற் றிச் சிறப்பிக்க எண்ணினார். சீகாழியை அவர் புறக் கண்களோடொன்றிய அகக் கண்ணால் கண்டார். கண்ட அவருக்கு ஒரு காட்சி தோன்றியது. அது மன திற்கு இன்பத்தையூட்டவே அப்படியே ஓவியப்படுத்தி விட்டார்.

வயலெல்லாம் நீர் நிறைந்திருந்தது. அவ்வயல் களில் செந்தாமரைகள் பூத்துக் கிடந்தன. ஒரு வயலின் கரையில் ஒரு மாமரம் நின்றிருந்தது. அதில் பல கனி கள் தொங்கின. அக்கனிகளுள் ஒன்று நன்றாகக் கனிந்த தால் சாறு வடிந்தது. வடிந்த சாறு மா இலையின் அடி

* குமரகுருபரன் மலர் 1. இதழ் 12-ல் வெளிவந்தது.

யில் விழுந்து நுனி வழியாக வழிந்தது. அங்ஙனம் வழிந்த சாறு வயல் நீரில் வழியாமல் அங்குப் பூத்த தொரு செந்தாமரைப்பூவில் வழிந்தது. இக்காட்சியினைக் கண்டார் சேக்கிழார். இக்காட்சியினைச் சேக்கிழார் அன்றிக் கம்பர் கண்டிருந்தால் தம் திறமையால் வேருகச் சுவைபடச் சித்தரித்திருப்பார். சேக்கிழார் எங்கும் தெய்வமணம் கமழக் காண்பவர். அதனுல், எக்காட்சியும் தெய்வத்தோடு தொடர்புடையதொரு காட்சியாகவே அவர்க்குத் தென்படும். அதனுல் அக்காட்சி அவர்க்கு அந்தணர் வேள்வியை நினைவு படுத்தியது. அன்றியும் அந்தணகுலப் பெரியாராகிய சம்பந்தரது புராணம் பாடுமிடத்து அவரது ஊரைச் சிறப்பிப்பதாலும், அவ்வூரில் அந்தணர் நிறைந்திருந்தனராதலாலும், அவ்வூர்க் காட்சிகளும் அந்தணரது செயல்களையே நினைப்பூட்டுவனவாக இருந்தமையாலும் அந்தணர் வேள்வி நினைவிற்கு வந்தது.

வேள்விக்கென்று அமைக்கப்பட்ட நெருப்புக் குழி (யாக குண்டம்) ஒன்றில் உள்ள நெருப்பில் குழியின் பக்கம் அமர்ந்த அந்தணன், நெய்யை அகப்பையால் (சிருக்கு சுருவத்தால்) ஊற்றுவது போன்றிருந்தது அக் காட்சி. வயல் நெருப்புக் குழியாகவும், அதனகத்து மலர்ந்த செந்தாமரை, குழியில் வளர்த்த நெருப்பாகவும், மாமரம் அந்தணனுகவும், அம்மரம் தன் கனியினின்றும் ஒழுகும் சாற்றினை இலையின் நுனியால் தாமரையில் ஒழுகவிடுவது அந்தணன் நெய்யை அகப்பையால் நெருப்பில் வார்ப்பதாகவும் சேக்கிழார்க்குப்பட்டது. அதனுல் அவர் தீட்டினுர் இப்பாட்டோவியத்தை.

"பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரநீள் இலைக்கடையால் ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களும்ஆ குதிவேட்கும் தகையன மணந்துளதால்"

இதனை ஓர் ஓவியமாக்க நினைத்தால் ஒரு நெடுந் தெருவும், ஓரங்களில் மாமரங்களும், பக்கங்களில் வயல் களும், வயல்களில் தாமரைப் பூக்களும் தீட்டிப் பின்னர், மரங்களின் கனிகள் ஒன்றிலிருந்து சாறு இலைவழியாகத் தாமரைப் பூவில் ஒழுகுவதுபோலத் தீட்டினால் ஓர் இயற்கை ஓவியமாகாதா? அடுத்த பக்கத்தில் ஓர் அந்தணன் வேள்விக் குழியின் பக்கத்திருந்து நெருப்பில் நெய்யை வார்ப்பதாகவும் தீட்டி வைத்துக்கொண்டால் இயற்கைக் காட்சியின் மாட்சியும், செயற்கைக் காட்சியின் மாட்சியும் நம்மை இன்புறுத்தும் என்பதில் ஐயமும் உண்டோ?

கம்பர் :—சேற்று வயலில் ஓர் அன்னம் மேய்ந்து கொண்டிருப்பதாக ஓர் ஓவியம் எழுதுங்கள். அவ்வயலிலேயே ஓரிடத்தில் செந்தாமரைப் பூவில் அன்னக் குஞ்சு ஒன்று வாய்திறந்து அமர்ந்திருப்பதாகவும் எழுதுங்கள்: அதற்குமேலே ஒரு பெண் எருமை திறந்த வாயுடன் நிற்பதாகவும் (அதாவது அன்னக் குஞ்சுக்கு நேர் அவ்வெருமையின் பால் சுரக்கும் மடி அமையும்படி நிற்பதாக) தீட்டுங்கள்.

அவ்வெருமையின் மடியிலிருந்து பால் அன்னக் குஞ்சுவின் திறந்த வாயில் சொரிவது போல அமையும்படித் தீட்டுதல் சாலச் சிறந்ததாகும். அவற்றின் பக்கமாகப் பச்சைத்தேரை ஒன்று வாய்திறந்து கத்துவது போன்ற தோற்றமுடையதாக வரைந்து வையுங்கள்.

இறுதியில் இவ்வாறு தீட்டப்பட்ட ஓர் ஓவியத்தினை மனதில் நன்கு கண்டு அதனைக்கொண்டு ஒரு கற்பனையை எழுப்புங்கள் பார்ப்போம். உங்கள் கற்பனையின் முடிவு கம்பரின் முடிவாகவும் வரக்கூடுமன்றோ? இதோ கம்பர் கற்பனை :

"சேலுண்ட ஒண்க ணாரின் திரிகின்ற செங்கா லன்னம்
பாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைதா லாட்டும் பண்ணை"

"ஒரு பெண் அன்னம் தன் குஞ்சினைச் செந்தாமரைப்பூவில் வளர்த்தித்தான் வயலில் திரிந்தது. ஒரு பெண் எருமை தன் கன்றினை ஊரில் விட்டு ஆங்கு வந்து மேய்ந்தது. அது அன்னக் குஞ்சு இருக்கும் இடம் வந்து தன் மடிக்கீழ் அக்குஞ்சு இருக்கும்படித் தற்செயலாக நின்று, தன் கன்றின் நினைப்பால் கத்தியது. கன்றை நினைத்தமையால் மடியிலிருந்து பால் ஒழுகியது. அவ்வெருமையின் கீழ் இருந்த குஞ்சு அப்பாலை நன்றாகக் குடித்துப் பக்கத்திலிருந்த தேரை கத்துவது தனக்குத் தாலாட்டுவது போலிருக்க நிம்மதியாகத் தூங்கியது.

இஃது ஓவியத்தின் கற்பனை. இக்கற்பனையில் கம்பர், நமக்கொரு கருத்தினை விளக்கியிருக்கின்றார் "பெண் அன்னம் சேலுண்ட ஒண்கணாரின் திரிகின்றது" என்றார். மீனை ஒத்த கண்களையுடைய மருத நிலப் பெண்கள் வயலில் வேலை செய்வதுபோலத் திரிகின்ற அன்னம் என்பது அதன் பொருள். 'அன்னம் தன் காரியத்தில் ஈடுபடத் தன் குழந்தையினை எருமையும் தேரையும் பாலூட்டித் தாலாட்டித் தூங்க வைத்தன' என்றமையால், 'மருதநில மகளிர்களும் தம் பிள்ளைகளை வீரி

டத்தில் விட்டுத் தம் காரியத்தில் ஈடுபட அவ்வழி வரும் பிறர், அக்குழந்தைகள் அழுது வருந்தாதபடிப் பாலூட்டித் தாலாட்டித் தூங்க வைப்பர்' என்ற அரிய கருத்தினைக் காட்டினார் கம்பர்.

இப்பாட்டினை நாட்டு வருணனையில் பாடி அந் நாட்டு மக்களேயன்றி மாக்களும் பிறர்க்கு உதவுதலைத் தவிர்வதில்லை என்பதைப் புலப்படுத்தினார். ஒரு கற்பனையை ஓவியப்படுத்தி அதன்மூலம் நாட்டு வளப்பத்தினையும் நாட்டு மக்களின் பண்பாட்டினையும் புலப்படுத்திய கம்பர் திறத்தைக் காணுங்கள்!

திருத்தக்க தேவர் :—கம்பர் முதலிய பிற்காலப் புலவர்கள் கற்பனைத் திறத்தில் மிக்கிருக்கக் காரணம் அவர்கள் முன்னோர் நூல்களை நன்கு பயின்று, அவற்றிற் கண்ட கற்பனைகளை நன்ருகச் சுவைத்ததேயாம். அவர்களுள் கற்பனையில் சிறந்தவர் திருத்தக்க தேவர் என்பவர். இவரது சிந்தாமணிக் காப்பியத்திலிருந்து கம்பர் கொண்ட கருத்துக்கள் பல. இத்தேவரின் பாட்டோவியம் ஒன்று ஈண்டு தீட்டப்படுகின்றது.

செந்தாமரைப் பூவில் ஓர் ஆண் அன்னம் இருக்கக் கண்டார் தேவர். சற்றுத் தொலைவில் வேறுபக்கமாகத் திரும்பியிருக்கக் கண்டார். இவ்வளவே இவர் கண்ட காட்சி. இதைவைத்து ஓவியம் தீட்டுவதென்ருல் ஒரு குளம், குளத்தில் தாமரைக் கொடி, கொடியில் பூ, பூமேல் அன்னம், சற்றுத்தொலைவில் ஒரு பெண் அன்னம் ஆகியவற்றினைத் தீட்டிவிடலாம். இவ்வாறே தேவரும் தமது பாட்டில் தீட்டிவிட்டார்.

புலவனுக்கும் ஓவியக்காரனுக்கும் வேற்றுமை யுண்டு. ஓவியக்காரன் கண்டதைக் கண்டபடிதான் தீட்டு வான். ஓவியத்தினைக் காணுபவர்களே குறிப்பாக அதன் உட்கிடக்கையைக் காணமுடியுமே தவிர ஓவியக் காரனால் வெளிப்படையாக ஓவியத்தில் காட்டமுடி யாது. ஆனால் புலவனோ தான் கண்ட காட்சியினைப் பாட்டில் ஓவியப்படுத்துவதோடு தன் கற்பனையையும் உட்கிடக்கையினையும் வெளிப்படுத்திவிடுவான்.

நம் தேவர் தீட்டிய ஓவியத்தின் கற்பனை யாது? பெண் அன்னத்துடன் புலந்துகொண்டு ஆண் அன்னம் தாமரைப் பூவில் வந்து தங்கிவிட்டதாகக் கற்பனை செய் தார். அதற்கு ஏற்ப ஓர் உவமையும் கொடுத்தார்.

"சுற்றத்துடன் (மனைவியுடன்) பிணக்கு நேர உடனே வெறுத்துவிட்டுத் தீயின் நடுவிலிருந்து தவம் புரியும் முனிவர் போன்றது, செந்தாமரைப் பூவில் ஆணன்னம் இருந்த நிலை" என்றார். அன்னத்தின் நிலையை அறிவித்த தேவர், ஒருவன் தன் 'மனைவி தாறு மாறாகப் பேசுவாளேயானால் கூறுமல் சந்நியாசம் கொள்' என்றும் அறிவித்தார். அவரது உவமையோடு கூடிய கற்பனை ஓவியம் வருமாறு:—

"சிறையனப் பெடையினோ டூடிச் சேவல்போய்
அறுபத வண்டினம் ஆர்ப்பத் தாமரை
உறைவது குழுவினின் நீங்கி யோகொடு
கறையற முயல்வதோர் கடவுள் ஒத்ததே"

(சிந்தாமணி 96)

இறுதியாக இளங்கோவடிகள் வரைந்த ஓவியம் ஒன்றனைக் கூறி இக்கட்டுரையினை முடிக்கின்றோம்.

**இளங்கோவடிகள்** :—ஒரு நாள் ஒரு தலைவன் ஒரு தலைவியை எதிர்ப்பட்டுக் காதல்கொண்டு கூடிக் குலாவி வீடு வந்தான். வந்த மறுநாள் முன்னாட் கண்ட தலைவியை நினைத்த வண்ணமாக வாட்டமுற்றிருந்தான். அவன் தோழன் வாட்டத்தின் காரணம் அறியாதவனாகி 'நின்மனம் வருந்தி வாடும்படி நிகழ்ந்ததென்ன? என வினவினான். உடனே தலைவன், 'நண்பனே! எனைத் துன்புறுத்தியவை யாவை என்பதைக் கூறுகிறேன் கேள்' என்று கூறினான், வருவனவற்றை.

"அலைவிரிகின்ற கடற்றுறை, அழகிய மணல் விரிந்த இடம், நறுநாற்றமுள்ள மலர் செறிந்த பொழில், நறியமணமுள்ள புரிகுழல், மதியை ஒக்கும் முகம், கயலனைய இருவிழிகள். இவைகளே என்னைத் துன்புறுத்தின." இவ்வாறு கூறினான் தலைவன். அவன் கூறியதாகவுள்ள இளங்கோவடிகள் பாட்டோவியம் இது.

"திரைவிரி தருதுறையே திருமணல் விரியிடமே
விரைவிரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே
மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
இருகயல் இணைவிழியே பெனையிடர் செய்தவையே"

(சிலம்பு கானல்வரி 15)

தன்னைத் துன்புறுத்தியவைகளைக் கூறியவன், தொடர்பு படுத்திக் கூறாமல் தனித்தனியாக வெருண்டவன் போலக் கூறினான். இவ்வாறு கூறியதால் அவன் முன்னாள் நிகழ்ந்த நிகழ்ச்சியையும், நிகழ்ந்த இடத்தையும் அடிக்கடி நினைத்தவண்ணம் இருந்தான் என்பது புலப்படும். இதனைத் தோழன் எவ்வாறு தொடர்புப் படுத்தி யறிவது? அவன் தன் மனத்தின்கண் ஓர் ஓவியம் தீட்டுதல் வேண்டும். "திரைவிரி தருதுறை" என்றதால்

ஒரு கடற்றுறை எழுதிக்கொள்ள வேண்டும், "மணல் விரியிடம்" என்றதால் மணற்பாங்கு அமைக்கவேண்டும். "நறுமலர் மிடைதரு பொழிலிடம்" என்றதால் எங்கும் மலர்பரந்த சோலை யமைக்கவேண்டும். குழல், முகம், விழிகளைக் கூறியதால், அவற்றையுடைய பெண்ணுருவத்தை அப்பொழிலிடத்து எழுதவேண்டும். இவ்வாறு எழுதிக்கண்டால், "கடற்றுறை மணற் பரப்பில் உள்ள ஒரு பொழிலில் இருந்த தலைவியைத் தலைவன் கூடினான்" எனத் தோழன் உணர்வான். இவ்வகையில் பாட்டோவியம் மட்டும் எழுதிக் கருத்தினைக் கூர்ந்துணர வைத்த இளங்கோவடிகள் திறனை எவ்வாறு வியப்பேம்!

இதுகாறும், சேக்கிழார், கம்பர், திருத்தக்கதேவர், இளங்கோவடிகள் ஆகியவர்களின் ஓவியங்கள் ஒவ்வொன்று கண்டோம். இவ்வாறு இவர்களுடையவும், இவர்களனையாருடையவும் ஆய ஓவியங்களைக் கண்டு மகிழ்வது நல்லது.

---

# 5. *மக்கட் செல்வம்

"மக்கட் செல்வம்" என்றதனை மக்களாகிய செல்வம் எனவும், 'மக்களாற் பெறும் செல்வம்' எனவும் இருவழியாகப் பொருள் கொள்ளலாம். இவ்விரு பொருளும்பற்றிச் சில ஈண்டு வரைகின்றேம்

* ஸ்ரீமத சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி ஆண்டு (1950 மலரில் வெளி வந்தது.

இவ்வுலகில் ஒருவன் அடையவேண்டிய பேறுகள் பல. அப்பேறுகள் யாவற்றிலும் தலை சிறந்த பேறு மக்களாகிய பேறேயாகும். "திருவள்ளுவர்"

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்றார். "படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும் மிகப் பெரும் செல்வராயினும்" மக்கட் பேற்றிற்காக அன்ன சத்திரம் வைத்தவர்களையும், ஆலயம் கட்டியவர்களையும் கண்டிருக்கிறோம். இறைவனுக்கு நேர்ந்து கொள்ளும் வழக்கத்தையும் காண்கிறோம். ஆனால், பிற பொருட் செல்வம் வேண்டும் என்று காசி இராமேச்சுரத்திற்குச் சென்று வந்தவர்களைக் கண்டோமில்லை. எனவே, மக்கள் பிற செல்வங்களைச் செல்வம் எனக் கருதினும் அவற்றை மக்களாகிய செல்வத்திற்குப் பிற்பட்டனவாகவே கருதுவர் என நாம் அறிகிறோம். அதனாலன்றோ வள்ளுவர் அவ்வாறு கூறினார்? புகழேந்தியாரும்,

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனும்மற்
றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்" என்றார்.

ஆனால் துறவிகட்கு மக்கட் பேறு வேண்டுவதில்லையே; ஆதலின் உலகில் தோன்றிய அனைவர்க்கும் மக்கட் பேறே சிறந்த பேறு என்பது எவ்வாறு அமையும் என ஐயுறலாம். தமிழகத்துத் துறவு நிலையை மேற்கொள்வோர் முதற்கண் இல்லறத்திருந்து துய்க்க வேண்டுவன யாவும் துய்த்துப்பின் வெறுப்புற்று, வனம் சென்று தவம் கிடந்து துறப்பர் ஆதலின், அவர்களுக்கும் இல்

வாழ்க்கையில் இருக்கும் காலத்தில் மக்கட்பேறு வேண்டும் என்னலாம்.

"மக்களொடு மகிழ்ந்து மனையறம் காத்து
மிக்க காம வேட்கை தீர்ந்துழித்
தலைவனும் தலைவியும் தம்பதி நீங்கித்
தொலைவில் சுற்றமொடு துறவறங் காப்ப"

என்று நம்பி யகப்பொருள் இலக்கணம் கூறுவதும் காண்க. அன்றித் துறவிகள் வீடும் வேண்டா விரகினர் ஆதலின் அவர்களைப்பற்றி ஈண்டுப் பேச்சில்லை யென்க.

இனி இம்மக்களால் பெறும் இன்பத்தினைக் காண்பாம் ஒருவனுக்குப் பொருட் செல்வமானது பல வகையினும் இன்பத்தைக் கொடுக்கின்றது. செல்வத்தைக் கொண்டு அனுபவிக்கும் வகை தெரிந்தவன் பலரும் புகழும் வண்ணம் அனுபவிக்கிறான். மக்களாகிய செல்வத்தாலும் ஒருவன் இன்பத்தினை அனுபவிக்கலாம். அனுபவித்துக் கொண்டும் வருகிறான். பல மணி நேரமாக அலுவலகத்தில் வேலை பார்த்துக் களைத்து வீடு திரும்பும் ஒருவனுக்கு, அக் களைப்புதீர இன்முகமுடன் எதிரே கைகாட்டி யழைக்கும் குழந்தை, அவனுக்குத் தரும் இன்பத்தினும் வேறு சிறந்த இன்பம் வேண்டுமோ? உடனே அவன் அக் குழந்தையை எடுத்துக் கொண்டவுடன், அது தரும் முத்தம் முத்தியின்பம் என்றன்றோ கருதுவான்? அவன் உண்ணும் காலத்தில் தன் கையிட்டுத் துழாவிய உணவு அவனுக்கு அமுதினும் மிக்க இனிதாகவன்றோ இருக்கும்? இவ்வின்பத்தைத் துய்த்து மகிழ்ந்த பாண்டியன் அறிவுடை நம்பி யென்பான் தன் உள்ளத்துணர்ச்சியைத் தெள்ளிதின் விரித்து,

"படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழும் நாளே"

எனப் பாடுவானுனன்.

தன்னிடம் சிறு பிணக்கு கொண்ட தன் காதலியைக் காதலன் அவள் விரும்பும் பொருள் கொணர்ந்து கொடுத்து அவள் பிணக்குத் தீர்த்து இணக்கம் கொள்வது உலகியல். காதலி விரும்பத்தக்க ஒரு சிறந்த பொருள், இருவரையும் பிணக்கு நீக்கி இணக்கமாக்குவதைக் காண்கிறோம். அவ்வாறே ஒரு குழந்தையும், பிணங்கிய தன் பெற்றோர்களை இணக்கமாக்கும். இருவர் உள்ளமும் குழந்தைபால் சென்று பதிந்திருத்தலின் அது தரும் இன்பங்களால் மகிழ்ந்தவராகி இருவரும் பிணக்கு நீங்குவர். இலக்கியங்களிலும், காதலன் தன்பால் ஊடல் கொண்ட காதலிபால் செல்வதற்கு முற்படுங் காலத்தில், இடையில் ஒருவரை வாயில் வேண்டிவிட, அதனை அவள் மறுக்க, இறுதியில் தன் மகனை எடுத்துக்கொண்டு நேரே உட்புக, அவள், மகனொடு வந்தமையால் அவனை மறுக்காது ஏற்றுக்கொள்ளப் பின் சார்ந்த கூட்டத்திற்கு "மகன் வாயிலாகக் கூடியது" என்ற துறை காணப்படுகின்றதை நோக்கின், பிற செல்வம் போலவே மக்களும் பிணக்குத் தீர்க்கும் பெரும் செல்வம் என உணரலாம். ஒரு குழந்தை தன் தாயின் துயரைப் போக்கியதாக அகநானூற்றில் ஒரு

பாடலில் காணப்படுகின்றது. ஒரு தலைவி, கணவன் தன்னைவிட்டுப் பிரிந்து ஒரு பரத்தையிடம் காமம் கொண்டவனாகி அவளிடத்திலேயே தங்க, மிகத் துன் புற்றாள். ஒருநாள் தன் மகனின் செயலால் தன் கண வன் தன் வீட்டிலேயே தங்கிப் பரத்தையை மறந்தான். அதனை அடுத்த நாள் தன் தோழியிடம் கூறினாள் அவள். அவள் கூற்று :—

தோழி! ஒருநாள், தலைவன் நம் தெருவழியாகப் பரத்தை வீட்டிற்குத் தேரில் ஏறிச் சென்றான். அப் போது, எம்மகன் வீட்டைவிட்டுத் தெருவில் விளையா டச் சென்றான். அவனைக் கண்டதும் தம் தேர்ப்பாக னைத் தேரை நிறுத்தச் செய்து இறங்கித், தன் மகனை எடுத்து மார்புறத் தழுவி "அப்பா' வீட்டிற்குச் செல்" எனக் கூறி விடுத்தான். மகன் உடனே அழத்தொடங்கி னான். அழுகின்றவனை எடுத்துக் கொண்டு வீட்டிற் குள்ளே வந்தான். நான், 'யானே இவ்வாறு தடுக்கும் படி செய்தேன்" என்று தலைவன் எண்ணிக் கொள் வானோ என நாணி, "வழியிற் செல்பவனை தடுத்தான் போலும் இக் கொடியோன்" என்ற சொல்லுடன், மகனை அடிக்கக் கோல் ஓச்சினேன். உடனே தலைவன் மகனைத் தன்பால் அணைத்துக் கொண்டான் அவ் வேளையில், பரத்தையர் சேரியில் அவனை அழைப்பது போல முழவின் ஓசை கேட்டது. அதனையும் பொருட் படுத்தாமல் என் வீட்டிலேயே தங்கிவிட்டான். இத னால் உலகில் அறிஞர் கூறிய பழமொழி உண்மை யென் பதை அனுபவ வாயிலாக அறிந்தேன். அப் பழமொழி யாவது,

"இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோர்" (அகம். 66)

என்பதாம்.

இவ்வாறு செல்வத்தைப் போலவே பெற்றோர் களுக்கு மக்கள் இன்பத்தை யூட்டுகின்றனர். அதனு லேயே மக்கள் 'செல்வம்' எனப் பட்டனர். இம் மக் கட் செல்வத்தையே மக்கள் பெரிதும் விரும்புவர் என் பதற்குப் பிறிதொரு சான்று காட்டுகின்றேம்.

ஓராடவன் தான் மணந்த மனைவியுடன் கூடிப் பன் னுள் இன்பந் துய்த்து வருகின்றுன். மனைவியும் நிறைந்த அறிவு, அழகு முதலிய குணங்கள், வாய்க்கப் பெற்றிருக்கிருள். அதனுல் அவளிடத்து மிக்க அன் புடன் அவன் இருந்து வருகிருன். ஆண்டுகள் பல கடக்கின்றன. ஆனுல் குழந்தைப் பேறு இல்லை. அத னுல் அவன் மனம் துன்புறுகிறது. அவன் துன்பத்தை மேலும் மேலும் வளர்க்கும் முறையில் யாரேனும் புதியதாக வருபவர்கள், தங்களுக்கு எத்துணைக் குழந் தைகள்? அவர்கள் நலந்தானே? என்றெல்லாம் கேட்டு விடுகிருர்கள். அவர்கட்கு இல்லை, என்ற விடையிறுக்க நேரும்போது அவன் அனலில் இட்ட புழுவெனத் துடிக் கிருன். காலம் செல்லச் செல்ல அவன் அழகிய தன் மனைவியையும் வெறுத்து நோக்குகிருன். வெறுப்பின் மிகுதியால் அடிக்கவும் செய்கிருன். அதனுல் குடும்பச் சச்சரவு தோன்றுகிறது. இவ்வாறு இன்ப வீடு துன்ப வீடாக மாறுவதை நாம் காணுகிறேம். சிலர் தம் மனைவியைவிட்டு வேற்றிடம் செல்வதையும், மனைவியை

விட்டு விட்டோ அல்லது அவள் ஒப்புதல் பெற்றோ வேறு மணம் புரிந்துகொள்வதையும் காண்கின்றோம். இதனால் மக்கட் பேற்றைப் பெரும் பேறென உலகினர் மதிக்கின்றனர் என நாம் உணரலாம் அன்றோ.

ஒரு தலைவன் பரத்தையிடம் காமம் கொண்டு அவள் வீட்டிலேயே தங்கிவிட்டான். தன் வீட்டில் தன் மனைவி கருவுற்றிருந்தாள். ஒருநாள் அவளுக்கு ஆண் மகவு ஒன்று பிறந்தது. அதனை அவனுக்குச் சொல்லி அனுப்பினார்கள். உடனே அவன் பரத்தை வீட்டை விட்டுத் தன் வீட்டிற்கு வந்து விட்டான். வந்தவன் தன் மனைவியிடம் அவளை முதலில் கண்ட காலத்தில் கொண்ட அன்பைவிட அதிகம் அன்பு கொண்டான் கொண்ட அவன் தோழியிடம் கூறும் கூற்றாக வைத்து,

"மையணி வேல்விழி வாள்நுதல்! கூர்ந்தது
தஞ்சை வாணன்
செய்யணி நாள்மலர்க் கொம்பர்
அன்னாள்குழவிப் பயந்து
நெய்யணி மேனியில் ஐயவி பூண்ட
நிலைய றிந்தே
கையணி வால்வளை யைக்கண்ட
நாளினும் காதன்மையே"

எனத் "தஞ்சை வாணன் கோவை" என்னும் நூல் கூறும்.

இதுகாறும் பிற பொருட் செல்வங்களைப்போல மக்கட் செல்வம் பெற்றோர்கட்கு இன்பம் ஊட்டுகின்றது எனக் கூறினோம். அம் மக்களும் குழந்தை நிலையில் இருக்கும் காலத்தில் ஊட்டும் இன்பமே கூறப்பட்டது. ஆனால் அவர்கள் வளர்ந்து பெரியவர்களாக ஆனபின்

னர் ஊட்டும் இன்பங்களும் பல உள. சுருங்கச் சொல் லுமிடத்து மக்கள் சான்ருேராகிப் பிறரால் புகழப் பட்டு "இவனைப் பெற்ருேர் என்ன தவம் நோற்ருர் களோ!" எனப் பிறரால் பெற்ருேர்க்குப் புகழ் கொடுத்து இன்புறுத்துவதே பெரியவர்களாகி ஊட்டும் இன்பமாகும் எனக் கூறி விடலாம். இவ்வளவும் இம்மை யுலகத்து இன்பங்களே. ஆனல் மறுமை வுலகத்தின்பத் தையும் மக்கள் எய்துவிப்பர். பொருட் செல்வத்தைக் கொண்டு தானம், தருமம் செய்து அதனல் புண்ணியம் எய்தி மறுமை யுலகத்தின்பத்தைப் பெறுதல் போல மக்களாலும் மறுமை யுலகம் எய்தலாம். எவ்வா றெனின் "மிக்க காம வேட்கை தீர்ந்த காலத்தில் வனம் எய்தியோ அல்லது வீட்டிலிருந்தபடியோ மறுமைக் காவனவற்றை மேற்கொண்டு ஒழுகுங் காலத்தில், யாதொரு கவலையும் இடையூறும் நேராதபடிக் காத்துத் துணை புரிதலினல் மக்கள் மறுமை இன்பத்தினையும் யெய்துவிக்கிருர்கள் ஆவர்.

இதுகாறும் 'மக்களாகிய செல்வம்' என்ற பொருள் பற்றிய கருத்துக்களை எழுதினேம். இனி 'மக்களாற் பெறும் செல்வம்' என்ற பொருள்பற்றி எழும் கருத்துக் களைச் சுருக்கமாக எழுதுகின்றேம்.

செல்வத்தால் பிறிதும் செல்வத்தை ஈட்டுதலும் ஈட்டிய செல்வத்தால் இன்பம் எய்துதலும் உலகியல். அம்முறையிலேயே மக்கட் செல்வத்தால் பெறும் செல் வங்களும் அச் செல்வங்களால் எய்தும் இன்பங்களும் உலகில் உள. மக்களால் எய்தும் செல்வங்கள் புறச் செல்வங்கள் அல்ல ஈண்டு குறிப்பன; அகச் செல்வங்க ளாகும். அவை, "பொறுமை, இரக்கம், கடவுள்

உணர்வு" ஆகிய மூன்றினையே ஈண்டு சிறப்பாகக் குறிக்கின்றேம். இம்முக்குணங்களாகிய செல்வங்களை மக்கள் தாம் பெரியவர்களாகிய பிற்காலத்தைவிடக் குழந்தைகளாக விளங்கும் முற்காலத்தில்தான் மிகுதியும் எய்துவிக்கின்றூர்கள். ஒருவன் தன் குழந்தைகளைக் காப்பாற்றுங் காலத்தில்தான் அவற்றை மிகுதியும் பெறுகின்றூன்.

'குழந்தை வளர்ப்பு, மிகவும் அருமையானது அதனலன்றே ஒரு புலவர் ஓர் அரசனை நோக்கி "அரசே! நீ உலகில் குழந்தைகளை வளர்ப்பவர்களைப்போல உலகத்தினைக் காப்பாயாக" என்றூர்? "காவல் குழவி கொள்பவரின் ஓம்புமதி" என்பது அவர் வாக்கு. இப்புலவர் உலகக் காவலுக்குக் குழந்தைக் காவலை உவமை கூறியிருப்பக் "கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச அடிகள்" குழந்தைக் காவலுக்கு உலகக் காவலை உவமை கூறியுள்ளார். அவர்,

"மிடியன் ஒருசெய் யாளன்அச்செய்
விளையக் காக்கும் செயல்போலப்
படியில் கல்வி விரும்பினேன்
பாடம் போற்றும் அதுபோல
ஒடிவில் செங்கோல் மனுவேந்தன்
உலகம் புரக்கும அதுபோலக்
கொடியநோன்பு செய்தீன்ற
கொடியை வளர்ந்தாள் மோகினியே"

என மோகினி தன் மகள் மாயையினை வளர்த்தமைக்கு "செங்கோல் மனுவேந்தன் உலகம் புரத்தலை" உவமை காட்டியது காண்க. எனவே குழந்தைக் காவலில் ஒரு நாட்டுக் காவலில் உள்ள துன்பம் உண்டென நாம் உணரலாம். இனி, பொறை முதலியவற்றை எவ்வாறு பெறு

கின்றோம் என்பதற்கு எம் அனுபவத்தை எழுதிக் கட்டுரையை முடிக்கின்றோம்.

ஒருநாள் இரவு எங்கள் முதல் மகன், இரண்டாண்டு நிரம்பியவன்—மழலை மொழியினன்—தமிழரசன் என்னும் பெயரினன் அழத்தொடங்கி விட்டான். மணி ஒன்பது இருக்கும். அவன் அழுகைக்குக் காரணம் புலப்படவில்லை. வயிற்றுவலி இருக்குமோ என்று எண்ணினோம். ஆனால், மிட்டாய் ஒன்று கொடுக்க அதைத் தின்னுமளவும் அழாதிருந்து, தின்றபின் அழுதான் வெளியில் எடுத்து உலவியும் பயனில்லை. பலவாறு சமாதானம் செய்து பார்த்தும் பயன்படவில்லை. எதை நினைத்துக் கொண்டழுகிறான் என்று கண்டு பிடிக்க முடியவில்லை. தூங்கப்படுத்தியும் பயனில்லை. வரவரக் கோபமே எங்கட்கு அதிகரித்தது. அடித்தாலும் அழுகை நிற்காது. மேலும் அழுவான். ஊரடங்கி இருக்கிறது. ஊரார் விடிந்த பின்னர், "ஏன் குழந்தை அழுதான்" என்று கேட்டால் என்ன பதில் கூறுவது? என்றெல்லாம் நினைத்தேம். பின் அவனை மிகவும் சினந்து அச்சுறுத்தினோம். சினத்தைக் கண்டவுடன் அஞ்சி அதிகம் அழுது தேம்பியபடியே உறங்கி விட்டான்: இந்தக் காலத்தில் இக்குழந்தையால் பட்ட மனத்துன்பம் மிகுதி இந்த நிகழ்ச்சியில் யாங்கள் மிக்க பொறுமையே கைக் கொண்டோம். குழந்தைகள், ஏதேனும் ஒன்றை நினைத்துக்கொண்டு அழுகிற காலத்தில் பெற்றோர்களுக்குக் கோபம் வந்தும் பயனில்லாது போகவே, அவர்கள் இயற்கையாகவே பொறுமையை மேற்கொள்ள வேண்டியவர்களாகின்றனர். பல பிள்ளைகள் நிறைந்த வீட்டினர் அவர்களால் ஏற்படும். துன்

பங்களைப் பொறுத்துக்கொள்ளும் இயல்பினராகின்றனர். பிள்ளைகளைக் காப்பாற்றும் காலத்தில் அவர்கள் பொறுமையைக் கைக் கொள்ளவில்லை என்றால் எவ்வாறு காக்க முடியும்?

தமிழரசன் ஓராண்டுக் குழந்தையாக இருந்த காலத்தில் ஒருநாள் அழத் தொடங்கிவிட்டான். அழுகையின் காரணத்தை யாங்கள் அறிந்தேம் இல்லை. அப்போது அக்குழந்தை துடிதுடிப்பினைக் கண்டு எங்களுக்கு இரக்கமே மேலிட்டது. அழுகையின் காரணம் வயிற்றுவலி என்று மருத்துவரால் தெரிந்து கொண்டோம். அது முதல் பிற குழந்தைகள் அழுங்காலத்தில் எம் குழந்தையின் அழுகை நினைவிற்கு வரும். மனம் மிகவும் இரக்கம் கொள்ளும்.

அழுத காலத்தில் அழுகையை நிறுத்த எவ்வளவோ முயன்றும் முடியாது போகவே இறுதியில் இறைவனையே நினைக்க வேண்டியதாயிற்று.

எனவே மக்கள், தம் குழவிப் பருவத்தில் பெற்றோர்களுக்குப் பொறுமை, இரக்கம், கடவுள், உணர்வு ஆகிய குணங்களாகிய செல்வங்களைத் தருகின்றனர் என்று கொள்ளலாம். இச் செல்வங்களைக் கொண்டு வாழ்க்கையில் அவற்றைப் பயன்படுத்தி இம்மையிலும் மறுமையிலும் இன்பங்களை அவர்கள் பெறலாம்.

# 6. பெரியாரைத் துணைக்கொள்.

“உன் வயசென்ன; அவன் வயசென்ன? நீ ஏன் அவனுடன் கூடிக் கெடுகின்றாய்? உன்னைவிடப் பெரியவனோடல்லவா கூடவேண்டும்” என்று தன்னை விட வயதில் சிறியவனுடன் கூடி விளையாடும் ஒருவனை அவன் பெற்றோர் கண்டிப்பதையும்,

> “ஏலே! நீ படிக்கும் வகுப்பென்ன; அவன் படிக்கும் வகுப்பென்ன? உன்னைவிட மேல் வகுப்பு மாணவனுடன் கூடினாலல்லவோ உன் சந்தேகங்களை நீக்கிப் படிப்பில் ஊக்கம் உண்டாகும்படிச் செய்வான்? அதை விடுத்துச் சிறிய வகுப்பு மாணவனுடன் கூடி விளையாடியே காலத்தைக் கழிக்கிறாயே.”

என்று ஆசிரியர் ஒருவர் தம் மாணவனைக் கண்டிப்பதையும்,

> “அதுவா...வரவரப் பெரிய ஊர்சுற்றியாய்ப் போய்விட்டதே! அதன் கூட்டாளிகளைப் பார்த்தாலேயே தெரியவில்லையா! நல்லார்கள் கூட்டுறவு இருந்தால்தானே சீர்ப்படும்?”

என்று ஊர்ப் பெரிய மனிதர் ஒருவர் மற்றொருவரிடம் தீயோர் கூட்டுறவுள்ள ஒருவனைப்பற்றிப் பேசுவதையும் அடிக்கடி நாம் கேட்கலாம். இவர்கள் யாவரும் ஒருவனுக்குப் பெரியார் இணக்கம் தேவை என்பதையே மனதில் கொண்டவர்கள் ஆவர். ஆனால் முதலாமவர் வயதில் பெரியாரையும் இரண்டாமவர் அறிவில் பெரியாரையும் மூன்றாமவர் அறிவு ஒழுக்கங்களிற் பெரியாரையும் கருதியவர் ஆவர்.

தன்னைவிட வயதிற் சிறியவனுடன் சாரலாகாது என்று மூத்தவனிடம் செல்லும் ஒருவனை அம் மூத்தவன் வயதின் சிறுமை கருதித் தள்ளிவிடுவானா? ஆறும் வகுப்பு மாணவன் ஐந்தாம் வகுப்பு மாணவனுடன் கூடாமல் மேல் வகுப்பு மாணவனுடன் கூடினால் அவன் இவனை ஏற்றுக்கொள்வானா? அன்றித் தன்னின் மேம் பட்டானுடன் கூடவேண்டும் என்று இவனைத் தள்ளி விடுவானா? கீழ்மக்களுடன் சேர்ந்த ஒருவன்பின் மேன் மக்களுடன் சேரப்போமிடத்து அவர்கள் இவனைக் கீழான் எனத் தள்ளிவிடுவார்களா? இவ்வினாக்கள் எழுவது இயல்புதானே? "பெரியாரைத் துணைக் கொள்" என்றவர்கள் அவ்வளவில் நின்றுவிடாது "சிற்றினம் சேரேல்" என்றும் கூறிவிட்டார்கள். இவ் விரண்டும் மாறுபாடுடையனவாக அன்றோ இருக்கின் றன. இச்சிக்கலை எவ்வாறு தீர்த்துக்கொள்வது?

பெரியவர்கள் சிறியவர்களை ஏற்றுக் கொள்ளத் தான் வேண்டும். சிறியவர்களும் பெரியவர்களைச் சாரத் தான் வேண்டும். வயதிற் சிறியவன் மூத்தவனைச் சாரு மிடத்து அவன் சிறுமைக் குணங்களை விடவேண்டும். ஆறும் வகுப்பு மாணவன் தன் நிலைமையில் மேல் வகுப்பு மாணவனைக் கருதாமல் மதிப்பாகவே கருதி நடத்தல் வேண்டும். ஒருவன் தன்னின் மேம்பட்ட ஒழுக்கம் உடைய பெரியவரைச் சாரவேண்டின் தன் தீக் குணங் களை விடவேண்டும். இவ்வாறு விட்டவராகித் தம் மிடம் வருபவர்களைப் பெரியோர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். சாரும் தொழில் சிறியோரிடம் இருப்ப தால் அதற்கின்றியமையாத குணங்களை மேற்கொள் வதும் சிறியோர் கடனாகின்றது. பெரியோர் கடன்

அஃதறிந்து ஏற்றுக்கொள்வது. அதனாலன்றோ ஒருவனை நோக்கி 'நீ பெரியாரைத் துணைக்கொள்' என்றும், 'சிற்றினம் சேரேல்' என்றும் கூறினார்கள். பெரியோர்களை நோக்கிச் சிறியோரை ஏற்றுக்கொள்க என்று எவரும் கூறிற்றிலர் என்பதும் காணவேண்டும்.

இனி வயதில் மூத்தவனையும் படிக்கும் வகுப்பிற் பெரியவனையும் விட்டுப் பொதுவாகப் பெரியோர் யார்? அவர்களை யெவ்வாறு சேர்வது? சேர்வதாற் பயன் யாவை என்பனவற்றைச் சிறிது காண்போம்.

பெரியாராவார் சான்றோர். நற்குண நற்செய்கைகளும் அறிவும் நிரம்பியவர். செயற்கரிய செய்கலைச் செய்பவர். இப் பெரியாரின் அருட்குணத்தின் எல்லையினை,

"தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்" (நாலடி. 58)

என்ற நாலடிப் பாட்டில் காணலாம். அவரது உள்ளக் கிடக்கையினை,

"யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னா தென்றலும் இலமே இனளொடு
வானம் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கும் மல்லற் பேர்யாற்று

நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பதைத் திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே''

(புறம். 192)

என்ற புறப் பாட்டால் நன்கு அறியலாம்.

இத்தகைய பெரியாரை ஒருவன் சாரவேண்டுமாயின்—அவர் துணை பெறவேண்டுமாயின் தன் கீழ்க் குணங்கள் அனைத்தையும் விடல் வேண்டுமன்றோ? நீந்தத் தெரிந்தபின் கிணற்றில் இறங்குவதா? கிணற்றில் இறங்கி நீந்தக் கற்றுக்கொள்வதா? கீழ்க் குணங்களை விட்டபின் பெரியாரைச் சார்வதா? பெரியாரைச் சார்ந்து நாளடைவில் அவற்றை விடுவதா? கிணற்றில் இறங்கித்தானே நீந்தக் கற்றுக்கொள்ளல் வேண்டும்? அதுபோல அனைத்துக் கீழ்க்குணங்களும் ஒருவனால் உடனே விடமுடியாததாதலினால் பெரியார்களைச் சார்ந்தே நாளடைவில் விட நேரும். ஏன் எனின் எவை எவை கீழ்க்குணங்கள் என்று அவனுக்கே முற்றிலும் தெரியாதன்றோ? பெரியாரும் அவனை முதலில் ஏற்றுக் கொள்ளாதவர்போல் காணப்படினும் நாளடைவில் அவன் செய்யும் செயல் முதலியவற்றைக் கண்டு ஏற்றுக் கொள்வர். பெரியாரைச் சாருமுன் செய்த கீழான செயல்களால் விளையும் பயன்கள் எவ்வாறும் என்னின் அதற்கு விடை நாலடிப் பாட்டு நவில்வதைக் காணுங்கள்.

"அறியாப் பருவத்து அடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வும்—நெறியறிந்து
நற்சார்வு சாரக் கெடுமே வெயில்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு" (நாலடி. 171)

பெரியாருடன் எப்படியேனும் தொடர்பு கொண்டு பழகப் பழக நாளடைவில் அத்தொடர்பு,

"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு"

என்றபடி இன்பம் பயப்பதாகும். சிறந்த நட்பினை இருவருக்கும் உண்டு பண்ணும். பெரியார் கூடி விடுவரேல் பின் பிரியார். அதனால் பிரியா நட்பு ஏற்படவே அது அவன் செய்யும் குற்றத்தையும் பொறுக்கும்படிப் பெரியார்க்கு உண்டு பண்ணும். குற்றம் செய்தது குறித்து அவனை அவர் "பழித்துப் பலர் நடுவண் சொல்லாடார்". அவன் செய்ததையும் தாம் செய்ததாகவே எண்ணுவர். "நெல்லுக்கு உமியுண்டு, நீர்க்கு நுரையுண்டு, பூவிற்குப் புல்லிதழ் உண்டு. ஆதலினால் நம்மைச் சார்ந்தவனிடம் குற்றம் இருப்பதால் யாது தவறு? உமியினை நீக்கி நெல்லைக் கொள்கிறோம். நுரை நீக்கி நீரைக் கொள்கிறோம். சமயங்களில் புல்லிதழுடன் பூவினையும் கொள்கிறோம்" என்று எண்ணுவர். தாம் வெறுக்கும்படியான செயலைச் செய்தாலும், தமக்குப் பொருட்கேடு வந்தாலும், தம் உயிர்க்கே இறுதி தரும் படியாக அவன் ஏதேனும் செய்தாலும்,

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.

அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்''

என்ற குறள்களுக்கேற்ப இருப்பர்.

பெரியார் தம்மைச் சார்ந்தவனின் பிழைகளைப் பொறுப்பதோடன்றி அவனிடம் சிறந்த நட்பினைக் கொண்டமையால்,

"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு''

என்று கொண்டு தக்க அறிவுரைகளைக் கழறுவர். "அற நெறி அறிக; கூற்றம் அஞ்சுக: பிறர் கடுஞ் சொல் பொறுக்க; வஞ்சம் நீக்குக; சிற்றினம் சேரேல்; பெரியவர்களால் நல்ல வாழ்த்துப் பெறுக'' என்றெல் லாம் அறவுரை கூறி அவ்வாறு செயலில் இறங்கும்படி உதவியும் புரிவர். தம்மைச் சார்ந்தவன் அரசனேயாயி னும் இடித்துரைக்கும் கடமையில் தவறார். ஒரு வர லாற்றுச் சான்று காட்டுகின்றோம்.

பழங்காலப் பாண்டியர்களுள் அறிவுடை நம்பி என்பானும் ஒருவன். அவன் சிறந்த செங்கோலினன். அவன் நாட்டுப் பிசிர் என்னும் ஊரில் தோன்றிய ஆந்தை யார் என்ற புலவர் அவன் அவைக்களப் புலவர்களுள் ஒருவர். ஒருகால் இப்புலவர், சோழநாட்டுப் புலவர் களிடம் தம் பாண்டியனைப்பற்றிக் கூற நேர்ந்தபோது, "வேந்தனும் அல்லவை செய்யான் காக்கும்'' என்று அவன் செங்கோலன் எனச் சிறப்பித்தார் என்றால் அவன்பால் இவர் கொண்ட மதிப்பு எத்தகைத்து என் பதும் கூறவேண்டுமோ? ஊழ்வயத்தால் அறிவுடை நம்பி கொடுங்கோலன் ஆயினன். குடிமக்களிடம் நெறி

தவறி இறை வாங்கினன். அரசியல் அலுவலாளர் இறை பெறவேண்டிச் செய்த கொடுமை குடிகளை வாட்டியது. உணர்ந்த புலவர் அரசனிடம் சென்று இப் பாடலைப் பாடினர்.

"காய்நெல் லறுத்துக் கவளம் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினும் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே"

(புறம். 184)

"அரசே! ஒருமா அளவிற் குறைந்த வயலில் விளைந்த நெல்லை அறுத்துவந்து பதப்படுத்திக் கவளமாக யானைக்குக் கொடுத்தால் பல நாளைக் குப் போதிய உணவினை அவ்வயல் விளைவிக்கும். அதை விடுத்து நூறு வயலில் நெல் விளைந்ததாயி னும் யானைதானே சென்றுண்ணத் தொடங்குமா னல் அது உண்ணும் நெல்லைவிட அதன் காலில் மிதிபட்டுச் சிதைவுறும் நெல்லே மிகுதியாகும். அதுபோல அரசனும் பெறவேண்டிய முறைப்படி இறைப் பொருளைப் பெறுவானானல் நாடும் வளம் மிக்கு இவனும் புகழ் பெறுவான். அவ்வாறின்றி அரசன் அறிவால் மெல்லியனாகித் தகுதி யறியாத

வர்களும் அரசன் விரும்புவதையே தவருக இருந்தாலும் தாமும் விரும்புவதாக நடித்து உடன்படும் அலுவலாளரோடு கூடிக் குடிமக்களிடம் அன்பு கெடும்படி வாரிக்கொள்ளும் பொருளை விரும்புவாளுயின் அவன் அவற்றை அனுபவிக்கவும் பெருன். உலகமும் அவனுல் கெடும்''

என்பது இப்பாடலின் பொருள். இப்புலவர் கூற்றினைக் கேட்ட அறிவுடை நம்பி அறிவுடை நம்பியாயினன். அன்று முதல் நல்லன செய்து செங்கோல் வளையாதபடிக் காத்துவந்தான்.

தவறி நடக்கும் காலத்தில், வேம்பும் கடுவும் போல்வனவற்றை இடித்துக் கூறித் திருத்தும் பெரியவர் தம்மை யடைந்தவனுக்கு ஏதேனும் தீங்கு நேருமாயின் வாளா இருப்பரோ?

> "உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
> இடுக்கண் களைவதாம் நட்பு''

என்பதற்கேற்ப விரைந்து அத்தீங்கினைப் போக்குவர் அன்ருே? தன்னைவந்து அடைந்த சுக்கிரீவனிடம் இராமன், அவனைக் காப்பதாகக் கூறி,

> மற்றினி யுரைப்ப தென்னே வானிடை மண்ணில் உன்னைச்
> செற்றவர் என்னைச் செற்ருர் தீயரே யெனினும் உன்னேடு
> உற்றவர் எனக்கும் உற்ருர் உன்கிளை எனதென் காதற்
> சுற்றம்உன் சுற்றம் நீயென் னின் உயிர்த்துணைவன் என்ருன்
>
> (கம்ப. கிஷ். நட்பு 27)

அதற்கேற்ப வாலியைக்கொன்று அவன் இடுக்கண் தீர்த்து அரசன் ஆக்கியது ஈண்டு நினைவு கூர்தற்குரியது.

இத்தகைய பெரியாரைத் துணைகொண்டு நடக்கு மிடத்து அவரிடம் ஒருவன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்? அவர் சொற்படி நடத்தல் வேண்டும். சிற்றினம் சேரலாகாது. அவன் நல்லவனுயினும் அவன் இனத்தின் சிறுமையால் அவனும் இகழப்படுவான். அதனால் அவர் அவன் சிற்றினச் சேர்க்கையை வெறுப்பர். எவ்வளவு கூறியும் சிற்றினச் சேர்க்கையை விடவில்லை யென்றால்,

"வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்று ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்
ஆற்றும் துணையும் பொறுக்க பொறுஅனின்
தூற்றுதே தூர விடல்"

என்றதற்கேற்ப அவனை விட்டு நீங்குவர். தன் பிழையினைப் பொறுப்பாரே என்று அளவிற்கு மீறிச் செல்லுதல் தவருகும். தவறு காட்டிக் கண்டிப்பின் அதற்கு ஏற்ப நடந்து மீண்டும் அத்தவறு வாராத படித் திருந்தவேண்டும்.

ஒருவன் நன்முறையில் பெரியாரோடு சார்ந்து வந்தால் அவன் அடையும் பயன் இம்மை மறுமை யின்பங்களாம் கருணைச் சிவப்பிரகாசர் ஒரு கற்பனையின் மூலம் பெரியாரைச் சார்ந்தால் ஒருவன் மறுமை யின்பம் பெறுவன் என்பதைக் கூறுமாற்றைக் காண்போம்

"மலைமேல் உள்ள ஒரு மூங்கில் சந்திர மண்டலத்திற்கும் அப்பால் உயர்ந்து வளர்ந்தது அதனைப் பற்றிப் படர்ந்தன முருகுவிரி மலர்க்கொடிகள். மூங்கில் எவ்வளவு உயர்ந்ததோ அவ்வளவு தூரம் கொடிகளும் படர்ந்தன. படர்ந்து துறக்கத்துள்ள கற்பகத்திலும் படர்ந்தன. அவை மூங்கிலைச் சாரவில்லை யென்றால்

கீழேயே படர்ந்து மக்கள் மாக்களால் மிதிபட்டு அழிய நேரும். அதனால் அறிவிற் பெரியாரைச் சார்ந்து அவர் வழி நடந்தால் துறக்கம் புகல் எளிதாகும்'' என்பது அவர் கூறிய கற்பனை.

''முருகுவிரி மலர்க்கொடிகள் மூங்கில்மிசைப் படர்ந்துபோய்
பொருவரிய துறக்கத்துள் புகுந்துவளர் கற்பகமாம்
மரமுழுதும் படர்ந்தலவும் வளர்மதியின் மேலாய [தோ''
பெரியவரை அடைந்தொழுகப் பெறில்துறக்கம் புகலரி

இப்பாடலின் ஈற்றடி இருபொருள்களில் அமைந்துளது. ''வளர்மதியின் (சந்திரனுக்கு) மேலாக வளர்ந்த பெரிய மூங்கிலைச் சார்ந்து படர்ந்தால் கொடிகள் துறக்கம் புகுவது அரிதோ' என்பதும் ''வளர் மதியின் (அறிவின்) மேம்பட்ட சான்றோரைச் சார்ந்தொழுகப் பெறின் ஒருவன் துறக்கம் புகல் அரிதோ'' என்பதும் ஆம். எனவே பெரியோரைச் சார்ந்தால் துறக்க இன்பம் எளிதில் பெறலாம் என்பது உணரலாம். அஃதன்றியும் அதற்கப்பாற்பட்ட இன்பத்தினையும் பெறுதல் திண்ணம். அடுத்து இம்மையின்பத்தைக் காண்போம்.

பெரியவரைச் சார்ந்ததால் ஊரில் உள்ள பெருமக்கள் நல்ல சேர்க்கை யிவனுக்குண்டு எனப் புகழ்தலோடு மற்றவர்களுக்கு இவனைக் காட்டி அறிவுறுத்தும் மேம்பாடும் பெறுவான். மக்களும் மதிப்புத் தருவர். பெரிய அதிகாரிக்குக் கிடைக்கும் சிறப்பு அவ்வதிகாரியின் கீழ் அலுவலாளனுக்கும் கிடைக்கின்றதைக் காண்கின்றோமன்றோ? ஒரு செல்வனைச் சார்ந்து பழகும் ஒருவன் பிறரால் அச்செல்வன் அடையும் சிறப்புக்களைப் பெறுதலையும் காண்கின்றோம். அவ்வலுவலாளனோ அவ்வொரு

வனோ தனித்து வருவார்களாயின் அவர்களை வரவேற்றுச் சிறப்புச் செய்வார் யாவர்? அவ்வாறே பெரியாரைச் சார்ந்தவனும் சிறப்புப் பெறுவன். அப்போது அவன் சிறுமை அவர்கட்குப் புலப்படாது. பாலுடன் கலந்த நீர் பருகுவானுக்குப் பாலாகத் தோன்றுமேயன்றி நீராகத் தோன்றுமோ? அவன் நல்ல குலத்திற் பிறந்திலனேனும் பெரியாரைச் சார்ந்ததால் நற்குலத்தான் போன்றே நிற்பன். "ஊரங்கண நீர் உரவு நீர்ச் சேர்ந்தக்கால் பேரும் பிறிதாகித் தீர்த்த" மாவது போல நல்லன் ஆவன். பெரியார்க்குப் பிறர் செய்யும் வணக்கமும் "ஒண்கதிர் வாண் மதியம் சேர்தலால் ஓங்கிய அங்கண் விசும்பின் முயலும் தொழப்படுதல்போல்" பெறுவர். பகைவரும் அவனை நெருங்க அஞ்சுவர்.

> "கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்
> ஒல்காவே யாகும் உழவர் உழுபடைக்கு
> மெல்லியரே யாயினும் நற்சார்வு சார்ந்தாரேல்
> செல்லாவாம் செற்றார் சினம்"

என்றது காண்க. முடிவாகக் கூறுமிடத்துப் பெரியாரைச் சார்ந்தால் பயன் இல்லாமற் போகாது என்னலாம்.

இதுகாறும் கூறியவாற்றால் ஒருவன் தன்னின் கீழானவனைச் சாராது மேலானவரைச் சாரவேண்டும் என்பதும், அவ்வாறு சாருமிடத்துத் தன் கீழ்க்குணங்களை விடவேண்டும் என்பதும், பெரியோர் அவனை ஏற்றுக்கொள்வரேல் பின்விடாது பிழை கண்டவிடத்துப் பொறுத்துத் திருத்துவர் என்பதும், அவரிடம் நடந்து கொள்ளவேண்டிய முறை இன்னதென்பதும், அதனால் மறுமையின்மைப் பயன்கள் பெறலாம் என்பதும், அறி

யப்பட்டன. பெரியாரைச் சார்ந்தால் பெருதன இல்லை யென்பதற்கேற்ப ஈண்டு நான்மணிக்கடிகைப் பாட்டொன்று நினைவுக்கு வருதலின் அதனை எழுதிக் கட்டுரையினை நிறுத்துகின்றேம்.

"இரும்பின் இரும்பிடைப் போழ்ப பெருஞ்சிறப்பின்
நீருண்டான் நீரால்வாய் பூசுப—தேரின்
அரிய அரியவற்றுற் கொள்ப பெரிய
பெரியாரான எய்தப் படும்"

# 7. திருவள்ளுவரும், சேசுநாதரும்

திருவள்ளுவர் என்ற பெயரைக் கேட்கும்போதே தமிழ் நாடு தலை நிமிர்கிறது. மற்றைய நாடுகள் ஆவலாய்க் கேட்கின்றன. "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட" தன்றே தமிழ் நாடு? வள்ளுவன் தன்னை உலகமும் ஏற்றுக்கொண்ட தன்றே? தமிழன் தனிப் பெரும் புலவனை அடைந்தமையால் இறுமாப்படைகின்றான். மற்றவர் அப்புலவனால் பயனடைந்து மனம் மகிழ்கின்றனர். சமயவாதிகள் வள்ளுவரைப் பற்றிப் பலவாருகச் சச்சரவு செய்து கொள்கின்றனர். 'எம் சமயக் கருத்துக்களைத்தான் வள்ளுவர் கூறியிருக்கின்றார். ஆதலின் அவர் எம் சமயத்தைச் சார்ந்தவரே யாவர்' என ஒவ்வொரு சமயத்தாரும் கூக்குரலிடுகின்றனர். அதற்கேற்ப ஆதாரங்களையும் வலிய மேற்கொள்கின்றனர். கடவுளே வேண்டாம் என்போரும் கூட வள்ளுவர் குறளில் வரும் கடவுள் சம்பந்தமான சொற்றொடர்களுக்கும் வேறு பொருள் கூறிக்கொண்டு வள்ளுவர் கடவுள் தொடர்

பற்றவர் எனக் கூறி வருகின்றனர். தமிழ் நாட்டிற்குப் புதியதாக அண்மையில் வந்தனவான மகமதியம் கிறித் தவம் போன்ற சமயங்களும் வள்ளுவரைத் தங்களைச் சார்ந்தவர் என்றே கூறுகின்றன எனின் நாம் அறியும் உண்மை யாது? 'வள்ளுவர் உலகப் பொதுப் புலவர்; தமிழ் நாட்டில் தோன்றினராயினும் தாம் ஒரு தமிழன் என்ற அளவில் நில்லாது "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற பொது நோக்கில் நின்று, உலகுக்கே பயன்தரும் நிலையில்—யாவரும் பின்பற்றும் நிலையில்—எக்காலத்தும் மேற் கொள்ளத்தகும் நிலையில் ஒரு பெரிய சிறந்த சட்ட நூலினைத் தந்தருளிய வள்ளல்' என்பதே அவ்வுண்மை.

தமிழ் நாட்டில் உள்ள சமயவாதிகளான சைவர், வைணவர், சைனர், புத்தர் ஆகியவர்கள் தொன்று தொட்டு இருந்து வருவதால் அவர்கள் வள்ளுவர் குறளில் தமக்கு வேண்டும் ஆதாரங்களை வலிந்து மேற் கொண்டு வள்ளுவர் தம் சமயத்தவர் என்கின்றனர். ஆனால், மகமதியரும், கிறித்தவரும் தமிழ் நாட்டின் தொன்று தொட்ட சமயத்தவர் அல்லர் ஆதலின், அவர் கள், வள்ளுவரைத் தம் சமயத்தைச் சார்ந்தவரே எனக் கூற முடியாதன்றோ? அதனால் வேறு வழியைக் கைக் கொண்டனர். எங்கள் நபி நாயகமே வள்ளுவராகத் தோன்றினர்; எங்கள் யேசுநாதரே வள்ளுவராகத் தோன்றினர் என்று கூறுகின்றனர். இவ்வாறு அனை வரும் கூறுதற்குக் காரணம் அனைவரது கொள்கைகளும் வள்ளுவர் குறளில் மலிந்திருப்பதுதான். அவ்வச் சம யத்தார் கொள்கைகளில் வேண்டுமாயின் குறைபாடு இருக்கும். ஆனால் வள்ளுவர் குறளில் குறைபாடிருத் தல் அரிது. இனி வள்ளுவர் வாக்கும் யேசுநாதர் வாக்

கும் ஒன்ருக விளங்கும் கருத்துக்களை ஈண்டெழுது கின்றேம்.

சேசுநாதர் தோன்றி மறைந்த வரையிலும் பல வியத்தகு செயல்களைச் செய்து அருள் அறங்கள் பல வற்றை எடுத்துரைத்திருப்பினும் அவருடைய மலைச் சொற்பொழிவுகள் கேட்கக் கேட்கத் தெவிட்டாதன வாகும். * அர்ச். மத்தேயு என்பவர் எழுதிய சேசு வின் வாக்கினையும் வள்ளுவர் வாக்கினையும் மட்டும் எழுதுகின்றேம்.

சேசு :— மனதரித்திரர் பாக்கியவான்கள், ஏன் எனின் மோட்ச ராஜ்யம் அவர்களுடையது.

வள்ளுவர் :—

ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.

சேசு :— "ஒருவன் உனது வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தையும் காட்டு. பின்னும் உன் அங்கியைப் பறிக்கும்படி உன்னேடே வழக்காடக் கருத்தாய் இருக்கிறவனுக்கு உன் போர் வையையும் விட்டுவிடு. அல்லாமலும் எவனுலும் ஆயி ரம் அடி தூரம்வர உன்னைப் பலவந்தம் செய்தால் அவ னேடே வேறு இரண்டாயிரம் அடிதூரம் போவாயாக"

(இவற்றின் கருத்து உனக்குத் துன்பம் விளைப்பவ னுக்கு அதைப் பொறுத்துக்கொண்டு இன்பமான தையே செய்க என்பதாம்)

உங்கள் எதிராளியைச் சிநேகியுங்கள்; உங்க ளைப் பகைக்கிறவனுக்கு நன்மை செய்யுங்கள். உங்களை

---

* 1942-ல் புதுவை, கத்தோலிக்க மிஷன் பிரசினரால் பதிப்பிக்கப் பட்ட சேசு கிறீஸ்துநாதர் பரிசுத்த சுவிசேஷம் (தமிழ்) காண்க.

உபத்திரவப்படுத்துகிறவர்களுக்காகவும் உங்கள் பேரில் அபாண்டம் சொல்லுகிறவர்களுக்காகவும் வேண்டிக் கொள்ளுங்கள். நல்லோர்க்கும் தீயோர்க்கும் மேலாகத் தமது சூரியன் உதிக்கவும், நீதிமான்கள் பேரிலும் மழை வருஷிக்கவும் செய்கிற பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவுக்கு நீங்கள் ஏற்ற புத்திரராகும் பொருட்டு அப்படிச் செய்யுங்கள் ஏனென்றால் உங்களை நேசிப்பவர்களை மட்டும் நேசிப்பீர்களாகில் உங்களுக்கென்ன சம்பாவனையிருக்கும்? ஆயக்காரரும் அப்படியே செய்கிறார்களன்றோ? அன்றியும் உங்கள் சகோதரருக்கு மாத்திரம் ஆசாரம் செய்வீர்களேயாகில் நீங்கள் மற்றவர்களிலும் அதிகமாய்ச் செய்கிறதென்ன? அஞ்ஞானிகளும் அப்படிச் செய்கிறார்களல்லோ?

வள்ளுவர் :—

"பொறுத்தல் இறப்பினை யென்றும் அதனை
மறத்தல் அதனினூஉம் நன்று.

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்.

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு"

சேசு :—நீங்கள் மனிதரால் காணப்படும் பொருட்டு அவர்களுக்கு முன்பாக உங்கள் நற்கிரியைகளைச் செய்யாதபடிக்கு எச்சரிக்கையா யிருங்கள். அல்லாவிட்டால் பரமண்டலங்களிலே இருக்கின்ற உங்கள் பிதாவினிடத்தில் சம்பாவனை யடையமாட்டீர்கள். ஆகையால் நீ தர்மம் செய்கிறபோது கள்ள ஞானிகள் மனிதரால் சங்கிக்கப்படுதற்குத் தேவாலயங்களிலும் வீதிகளிலும்

செய்கிறது போல உனக்கு முன்னே எக்காளம் ஊது விக்க வேண்டாம். அவர்கள் தங்கள் சம்பாவனையை அடைந்தாயிற்றென்று நிச்சயமாய் உங்களுக்குச் சொல் லுகிறேன். நீயோ எனில் தர்மம் செய்கையில், உன் தருமம் மறைவாய் இருக்கத்தக்கதாக உனது வலதுகை செய்வதை உன் இடதுகை அறியாதிருக்கக்கடவது. அப்போது மறைவிலே காண்கின்ற உனது பிதா உனக் குச் சம்பாவனை அளிப்பார்.

வள்ளுவர் :—

*"காதல காதல் அறியாமை யுய்க்கிற்பின்,
ஏதில ஏதிலார் நூல்" (440)

சேசு :—நீங்கள் குற்றவாளிகளாக எண்ணப்படாத படிக்கு மற்றவர்களையும் குற்றவாளிகள் என்றெண்ணு தீர்கள். ஏனெனில், நீங்கள் மற்றவர்களை யெண்ணி யிருக்கும் வண்ணமாகவே நீங்கள் எண்ணப்படுவீர்கள். மேலும் எந்த அளவைக்கொண்டு அளந்திருப்பீர்களோ அதைக் கொண்டே உங்களுக்களக்கப்படும். நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தைப் பாராமல் (உன்னிடத் துள்ள பெருங் குற்றத்தைப் பாராமல்) உன் சகோதர னுடைய கண்ணிலிருக்கின்ற துரும்பை (சிறு குற் றத்தை)ப் பார்க்கிறதென்ன? அல்லது உன் கண்ணில் உத்திரம் இருக்க நீ உன் சகோதரனை நோக்கி உன் கண்ணிலிருக்கிற துரும்பை நானெடுக்க விடு என்று சொல்லுவதெப்படி? கள்ள ஞானியே! முந்த உன் கண் ணிலே யிருந்து உத்திரத்தை எடுத்துவிடு, அதன்பின்

* அரசன் விரும்பிய பொருள்களை அவா (பகைவர்) அவ்விருப்பம் அறி யாமல் அனுபவிக்க வல்லனாயின், பகைவா தன்னை வஞ்சித்தற்கு எண்ணும் எண்ணம் பழுதாம்" இவ்வாறு உரையாயினும் கொடைக்கும் இதனையே கொள்ளலாம்.

உன் சகோதரனுடைய கண்ணிலேயுள்ள துரும்பை எடுக்க வழி பார்ப்பாய்.

வள்ளுவர் :—

"ஏதிலார் குற்றம்போல் தன்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.
தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு"

சேசு :—கள்ள தீர்க்க தரிசிகளுக்கு எச்சரிக்கையாய் இருங்கள். அவர்கள் ஆட்டுத்தோலைப் போர்த்துக் கொண்டு உங்களிடத்து வருகிறார்கள்; ஆனால், உள்ளத்திலே பறிக்கிற ஓநாய்களாக இருக்கிறார்கள். அவர்களுடைய கனி (செயல்) களாலேயே அவர்களை அறிவீர்கள். முட்செடிகளில் திராட்சப்பழங்களையும் முட்பூண்டுகளில் அத்திப்பழங்களையும் பறிக்கிறதுண்டோ என்ன? அப்படியே நல்ல மரமெல்லாம் நற்கனிகளைக் கொடுக்கும். கெட்ட மரமோவெனில் கெட்ட கனிகளைக் கொடுக்கும். நல்ல மரம் கெட்ட கனிகளைத் தரவும், கெட்ட மரம் நற்கனிகளைத் தரவும் மாட்டா. நற்கனிகளைத் தராத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிற் போடப்படும். ஆதலால் அவர்களுடைய கனிகளைக் கொண்டே அவர்களை அறிவீர்கள்.

வள்ளுவர் :—

"வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. (273)
கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்" (279)

இதுவரையிலும் மலைச் சொற்பொழிவுகளில் சில வற்றை எழுதி, வள்ளுவர் வாக்கையும் எழுதினோம்.

இவைபோல் அனைத்து ஒப்புமைகளையும் காண்பதெனின் இக்கட்டுரை அளவுகடந்து பெருகும்.

சேசுநாதர் யூதேயா தேசத்தில் இருந்த காலத்தில் ஒருவன் அவரை அணுகி, "சற்குருவே நான் நித்திய சீவியத்தை யடையும்படி என்ன நன்மையைச் செய்வேன் என்று வேண்டினான். அதற்கு அவர் அருளாவது :—

"சீவியத்திற் பிரவேசிக்க உனக்கு மனதானால் கற்பனைகளை அனுசரி. கொலை செய்யாதிருப்பாயாக, விபசாரம் செய்யாதிருப்பாயாக, களவாடாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக, உன் பிதாவையும், மாதாவையும் சங்கித்திருப்பாயாக. உன்னைப்போல் உன் புறத்தியானையும் சிநேகித்திருப்பாயாக."

என்பது. பொது அறவுரைகளாகிய இவைகளை நம் வள்ளுவரின் கொல்லாமை, பிறன் மனைவிழையாமை, கள்ளாமை, வாய்மை முதலிய அதிகாரங்களில் விரிவாகக் காணலாம். சேசுவின் அருள்மொழியைக் கேட்ட அவ்வொருவன், "இவை யாவற்றையும் இளம் பிராய முதலே அனுசரித்து வந்தேன். இன்னும் எனக்குக் குறைவாய் இருக்கிறதென்ன?" என்று வேண்டினான். அதற்குச் சேசு,

"உத்தமனாயிருக்க உனக்கு மனதிருந்தால், நீ போய் உனக்குண்டானவைகளை விற்றுத் தரித்திரர்களுக்குக் கொடு. அப்போது பரலோகத்தில் உனக்கு ஒரு பொக்கிஷம் இருக்கும். பின்னும் வந்து என்னைப் பின்செல்"

என்றருளினார். இவர் கூற்று வள்ளுவரின் ஈகையை நினைவு படுத்தினும் சிறப்பாக,

"அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி"

என்ற குறளை யன்றோ நினைவு படுத்துகின்றது !

'உங்களுக்குள் பெரியவனாவதற்கு மனதாய் இருப்பவன் உங்கள் ஊழியனாயிருக்கக்கடவான். மீளவும் உங்களுக்குள் முதல்வனாயிருக்க மனதா யிருப்பவன் உங்களுக்கு அடிமையாய் இருக்கக் கடவான். அப்படியே மனுமகன் பணிவிடை செய்யப்படுவதற்கல்ல, ஆனால் பணிவிடை செய்யவும் அநேகருடைய இரக்ஷண்யமாகத் தனது பிராணனைக் கொடுக்கவும் வந்தான்."

இவ் வருள்மொழி சேசுநாதர் தம்முடைய சீடர்களுக்கருளியதாகும். இவ் வருள்மொழிக்கேற்றதாக நம் வள்ளுவர் வாக்கினைக் கீழ்க் காணலாம்.

"பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
யணியுமாம் தன்னை வியந்து" (978)

இவ்வாறு கருத்தொற்றுமைகள்—அருள் அற ஒற்றுமைகள் சேசுவிற்கும் வள்ளுவர்க்கும் ஒத்த தன்மையில் பெரும்பாலும் இருத்தலால் சேசுவே வள்ளுவராகத் தோன்றினர் என்றனர் கிறித்தவர்கள் அதனால் அவர்கள் வள்ளுவரைக் கிறித்துவுக்கு முற்பட்டவர் எனக்கொள்ள ஒப்பமாட்டார்கள். எவ்வாறாயினும் கருத்தொற்றுமைகள் உலகெங்கும் பரவி நிற்பதில் தவறொன்றும் இல்லையே ! இயற்கைதானே !

# 8. *தருமசங்கடம்

“நாம் யாருக்கென்று பரிந்து பேசுவது? இவரும் வேண்டியவரே; அவரும் வேண்டியவரே நியாயம் இருப்பதால் இவர் பக்கம் பேசலாம் என்றாலோ, அவருக்கு வருத்தம் வரும். அவர் பக்கம் பேசுவோம் என்றாலோ, இவருக்கு வருத்தம் வரும்; என்னடா இது பெரிய தரும சங்கடமாகப் போச்சு.”

இவ்வாறு, பலர் பல சந்தர்ப்பங்களில் கூறக் கேட்டிருக்கின்றோம். இருவருக்கும் வேண்டிய ஒருவர், தம்மாலான சொல், செயல், பொருள் உதவிகளை யாரேனும் ஒருவர்க்கே செய்யவேண்டும் என்ற நிலை தோன்றும்போது, அவர்படும் மனவேதனை சொல்லி முடியாது அவ்வேதனை கொண்ட அவர், அவ்விருவருள் ஒருவர் தம்முதவியினைப் பெறும் தகுதியினர் என்பதை உணர்ந்தும், மற்றொருவரின் உறவு, செல்வாக்கு, மூதலியவற்றைக் கருதியும் வேதனைப்படுவர். இந்த நிலையைத் தான் தரும சங்கடமான நிலை என்கிறோம்

இத்தரும சங்கடம் வட சொல்லாயிருந்தும் தமிழ் நாட்டில் பெரிதும் வழக்காறுள்ளதாயிற்று. தமிழ் வழக்கில் இதற்கு ஒத்த சொல் வழக்கிலில்லை. “இரு தலைக் கொள்ளி யெறும்பு” என்ற சொல் வழக்கு இருந்து வருகிறது. ஆனால், இது, தரும சங்கடம் என்பதற்குரிய பொருள் அனைத்தையும் தரும் ஆற்றல் உள்ளதன்று. ஒரு நீள மூங்கிற் கம்பின் இருதலைப்புக்களிலும் தீப்பற்றிக் கொள்ள அதனுள் இடைப்பட்ட எறும்பு எப்பக்கமும் சாராது அவதியுறுவதைத் தெரி

---

* செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 25, பரல் 1-ல் வெளிவந்தது.

விப்பது, "இருதலைக் கொள்ளி யெறும்பு" என்பது. எறும்பு எப்பக்கமும் சாராது துன்புறுதற்குத் தீப் பற்றியதாகிய ஒரே காரணம்தான் உண்டு. முடிவில் அவ்வெறும்பு இருபக்கத் தீயாலும் நெருக்கப்பட்டு இறந்துபடும். எறும்புக்குப் பிழைப்பு என்பதில்லை. இவ்வளவும் அடக்கி எப்பக்கமும் சார இயலாது அவதி யுறும் ஒருவர்க்கு உவமையாக "இருதலைக் கொள்ளி யெறும்பு" என்பது கூறப்படுவதில்லை, ஆனால் மன வேதனையை மட்டும் குறிக்கக் கூறப்படுகிறது. தரும சங்கடம் என்பதும் அத்தகைய மனவேதனைக்கே கூறப் படுவதெனினும், அம் மனவேதனை கொண்டோர், பின் ஒருவாறு அதனை நீக்கி ஒருபால் சார்தற்கும் இடம் கொடுக்கிறது. அன்றியும் இருபக்கமும் சாரவும் சாரா திருக்கவும் தனித்தனிக் காரணங்களையும் கொண்டிருக் கும். ஒரு பக்கம் தருமம் நிற்கும். மற்றொரு பக்கம் உறவு முதலிய காரணமாக வரும் பற்று நிற்கும். இவற்றினிடைப்பட்ட மனவேதனையைத்தான் தரும சங்கடம் என்பர். இதனைக் கம்பர் அழகாக விளக்கி இருத்தலைக் காணலாம்.

அயோத்தியிலிருந்து பல்லாண்டுகள் ஆண்ட தச ரதன் ஒருநாள் கண்ணாடியின் முன் நின்று தன்னை யணிந்துகொண்ட காலத்தில் தன் தலையில் ஒரு நரை யினைக் கண்டான். உடனே மந்திரி முதலியவர்களை அழைத்து அரச அவை கூட்டி, "நான் பல ஆண்டு களாக இவ்வரசினை மேற்கொண்டு நன்முறையிலேயே ஆண்டு வந்தேன்; என் முன்னோர்கள் சென்ற நெறியில் ஒரு சிறிதும் மாறுபட்டேனில்லை; தமக்கு மூப்பு வந்த காலத்தில் தம் புதல்வர்களிடம் அரசினை ஒப்பித்துத்

தாம் தவத்தினை மேற்கொண்டது போலவே எனக்கு மூப்பு வந்த இக்காலத்தில் இராமனுக்கு முடி சூட்டித் தவத்தினை மேற்கொள்ள எண்ணுகிறேன்; உங்கள் கருத்து யாது?" எனக் கூறிக் கேட்டனன்.

இதனைக் கேள்வியுற்ற அவையிலிருந்தார் அனைவரும் ஓரே துக்கத்தில் சிறிது ஆழ்ந்தனர். அவர்கள் துக்கமெல்லாம், 'தசரதன் துறவு கொள்ள நம்மைப் பிரியப் போகின்றானே' என்பதிலேயே பொருந்தியது. ஆனால், அடுத்து 'இராமன் முடி புனையப் போகின்றான்' என்பது நினைவுக்கு வரவே பெரு மகிழ்வு அடைந்தனர். அரசன்பால் கொண்ட அன்பு அவனை இழக்க இடந்தர வில்லை. ஆனால், இராமன்பால் கொண்ட அன்பு இராமன் முடிசூட வேண்டுகின்றது. இதனால் யாது சொல்வது என ஒன்றுமறியாது திகைத்தனர்; இதனைக் கம்பர்,

"திரண்ட தோளினன் இப்படிச் செப்பலும் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய வுவகையர் ஆங்கே
வெருண்டு மன்னவன் பிரிவெனு மவிம்மூறு நிலையால்
இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென இருந்தார்"

எனக் கூறினார். தலைக்கன்றை யீன்ற பசு அக்கன்றினிடத்து மிக்க அன்பு கொண்டு பாலூட்டி அதனைப் போற்றி வந்தது. சிலகாலம் கழித்து இரண்டாங் கன்றினை ஈன்றது. அக் கன்றுக்குப் பாலூட்ட வேண்டும்; முதல் கன்றினைத் தள்ளி வைக்கவேண்டும். முதல் கன்றினிடத்து முன் வைத்த அன்பு அதனைத் தள்ளிவைக்க மனந்தரவில்லை. ஆனால், அதனைத் தள்ளியே இரண்டாங் கன்றினுக்குப் பாலூட்ட வேண்டும். என் செய்யும் பசு? மிக வருந்துமன்றோ? அந்த

நிலையிலேயே அவையோர் இருந்தனர். அரசனைத் துறக்க நேர்வது பற்றிய துன்பமும், இராமன் முடி சூடுவது பற்றிய மகிழ்வும் கொண்ட அவையோர் நிலைக்குக் கம்பரின் உவமை பொருத்தமன்றோ?

இவ்வாறு அவர் மனநிலையைத் தெரிவித்த கம்பர், அத்துடன் அமையாது, மந்திரிகளின் கருத்தினைத்தான் எடுத்து மொழிய வந்த சுமந்திரன் என்பவன் வாயிலாக வும் நன்கு தெரிவித்தார். சுமந்திரன் சொல்லில்தான் தரும சங்கடம் என்பதற்குரிய பொருளைத் தெளிவாகக் காணலாம்.

"உறத்த கும்மர சிராமற்கென் றுவக்கின்ற மனத்தைத்
துறத்தி நீயெனும் சொற்சுடும் நின்குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கன்று
அறத்தி னாங்கினிச் சொடிதென லாவதொன் றியாதோ"

இது சுமந்திரன் கூற்று. "இராமனுக்கு அரசாட்சி அமைதல் தகுதியே என மனம் மகிழ்கிறது ஆனால் அம்மனத்தை நீ துறவினை மேற்கொள்ளுகின்றாய் என்ற கொடிய சொல் சுடுகின்றதே! என் செய்வோம்! நின்னைத் துறக்கவேண்டாம் என்று தடுத்துவிடுவோம்; அது அறமல்லவே! நின் குல முன்னோர் தம் முதுமைக் காலத்தில் அரசினைத் தம் புதல்வர்களுக்கு அளித்துத் தாம் துறந்தனர். அம் முறையினை—அறத்தினை இது வரை யாரும் மறந்தனர் இலர். நீயும் மறத்தல் நன் றன்றுதான். அதனாலேயே நின்னைத் தடை செய்தற் கில்லை. இத்தகைய அறம் இல்லை என்றால் தடுத்துவிடு வோம். இதனால் அறத்தைப் போலக் கொடுமையுள் ளது. வேறொன்றில்லை" என்பது இப்பாடலின் விளக்கம்.

இக்கூற்றால் அவையிலுள்ளோரைத் தருமமே துன்பத்திற்குள்ளாக்கியது என உணரலாம். அற வழியை மேற்கொள்பவர்களைச் சில காலங்களில் அவ் வறமே சங்கடத்திற்குள்ளாக்கிவிடும். அதனைத்தான் தரும சங்கடம் என்பர். எனவே, தரும சங்கடம் என்பது "தருமத்தால் விளையும் சங்கடம்" எனப் பொருள் கொள்ளும். இதன் நேரிய மொழி பெயர்ப்பாக (கம்பர் கூறியதற்கேற்ப) அறக்கொடுமை என்பதைக் கொள்ளலாம்.

இத் தரும சங்கடத்திற்குப் பெரிய புராணத்திருந் தும் ஓர் எடுத்துக்காட்டு தருகின்றோம்.

செங்காட்டங்குடி என்னும் ஊரிலிருந்து சிவனடியார்கட்கு வேண்டும் வழிபாடு செய்து உணவருத்தி யனுப்பும் தொண்டில் ஈடுபட்ட சிறுத்தொண்டர்க்கும் அவர் மனைவி வெண்காட்டு நங்கை என்பார்க்கும் சீராளன் என்னும் அருமை மகன் தோன்றி, ஐந்தாண்டுக் குழந்தையாக இருந்தனன். அடியார்க்கமுதருத்திப் பின்னுண்ணும் சிறுத்தொண்டர்க்கு ஒருநாள், சிவனருளால் அடியார் கிடைத்திலர். அடியாரைத் தேடித் தொண்டர் வெளிச்சென்ற சமயத்தில், சிவன், தானோர் வடநாட்டுப் பைராகி வேடங்கொண்டு தொண்டர் வீடடைந்து, வெண்காட்டு நங்கை இருக்க வேண்டவும், "ஆடவரில்லா வீட்டில் இருக்கமாட்டோம்; பக்கத்துள்ள கணபதீச்சரத்து ஆத்திமரத்தின் நீழலில் இருப்போம்; அடியார் வந்தால் அறிவிக்க' எனச் சொல்லிச் சென்றார். பின்னர்த் தொண்டர் அடியவரை எங்கும் காணாது வருத்தமுடன் வீடுவர, மனைவியாரால் பைராகி வந்து சென்ற செய்தி கேட்டுச் சென்று

பைராகியை அழைக்க, அவர், "ஒரு குடிக்கு ஒரு நல்ல சிறுவன் ஒரு மகனைத் தந்தை அரியத் தாய் பிடிக்கும் பொழுதில் தம்முள் மனம் உவந்தே, ஏதமின்றி அமைத்த கறி யாம் இட்டுண்பது' என மொழிய, அதற்கும் உடன்பட்ட தொண்டர் மீண்டு மனைவந்து, மனைவியாரிடம் பைராகி கூறியதைக் கூறினார். மனைவி யார், "அத்தகைய தொரு சிறந்த பிள்ளையை எவ்வாறு பெறுவேம்?" என்றார். அதற்குத் தொண்டர்,

"மனைவி யார்தம் முகம்நோக்கி
மற்றித் திறத்தால் மைந்தர்தமை
நினைவு நிரம்ப நிதிகொடுத்தால்
தருவார் உளரே நேர்நின்று
தனையன் தன்னைத் தந்தைதாய்
அரிவார் இல்லைத் தாழாமே
எனையிங் குய்ய நீபயந்தான்
தன்னை அழைப்போம்யாம் என்றார்"

"ஒரு குடிக்கு ஒரு மகனாக—அழகனாக உள்ள சிறுவனைப் பொருள் மிகுதியாக—அதாவது ஒருவர்க்கு மனம் நிறையும்படி கொடுத்தால் கொடுத்து விடுவார் உலகில் உளர். ஆனால், அவனைத் தந்தை அரிய மாட்டானே! தாயும் பிடிக்கமாட்டாளே! தாய் பிடிக்கத் தந்தை யரியினும் இருவரும் மனம் மகிழ்ந்து அக் காரியத்தைச் செய்யமாட்டார்களே! என் செய்வது? காலம் தாழ்க்காமல் நம் பிள்ளையைத்தான் நாம் அவ்வாறு கறி சமைக்க வேண்டும்" என்றார் தொண்டர்.

தொண்டர் கூற்றாக உள்ள மேற்பாடலில், சேக்கிழார் தரும சங்கடத்தை நன்றாக விளக்கிவிட்டார். தரும சங்கடமான நிலை வெண்காட்டு நங்கைக்கு உண்

டாகிவிட்டது. "நான் பிழைக்க நீ பெற்ற பிள்ளையை நாம் அழைப்போம்" என்றார் தொண்டர், அடியார் உண்ணவில்லை என்றால், தாமும் உண்ணார் ஆதலின் "எனை யிங்குய்ய (=யான் பிழைக்க)" என்றார். பிள்ளையிடத்துத் தந்தையைக் காட்டிலும் பெற்று வளர்த்த தாய்க்கே பெரிதும் பற்றுதல் இருக்கும் ஆதலின், "நீ பயந்தான் தன்னை" என்று கூறினார். இருவரும் மகிழ்வுடன் கறி சமைக்க வேண்டும் ஆதலின் 'யாம் அழைப்போம்' என்றார் தன் சொல்வழி நின்று அடியாரை உண்பித்துத் தன்னைக் காக்கும் பொறுப்பு அவர்க்கு உண்டென்பதை, "எனை யிங்குய்ய" என்பதால் விளக்கியும், "நீ பயந்தான்" (=நீ பெற்ற பிள்ளை) என்பதால், பிள்ளையை அரிய மனம் ஒருப்படாத தாயின் பின் திறத்தைச் சுட்டியும் கூறியது தரும சங்கட நிலையை நன்றாக விளக்குகின்றதன்றோ? அடியார்க்கு அமுது செய்வித்துக் கணவனைக் காக்க வேண்டுமானால் பிள்ளையை மகிழ்ச்சியோடு கறி சமைக்க வேண்டும் பிள்ளையைத் துறக்க மனம் இல்லை யென்றால், அடியார்க் கமுது செய்விக்க இயலாது போகத் தொண்டரும் அமுதருந்தாது இறப்பர். ஒருபால் கணவனை வேண்டிய கற்பு நிலையும், மற்றொருபால் பிள்ளையை வேண்டிய அன்பு நிலையும் வெண்காட்டு நங்கையை அலைக்கழிக்கின்றன. இந்நிலையே அவர்க்குற்ற அறக்கொடுமை—தரும சங்கடம் இரண்டு கன்றினுக்கிரங்கும் ஓர் ஆவின் நிலை—இருதலைக் கொள்ளியின் எறும்பு நிலை

இருதலைக் கொள்ளி எறும்பு பிழைப்பதில்லை. ஆனால், இரண்டு கன்றினுக்கிரங்கும் ஓர் ஆ எப்பொழுதும் இரங்கிச் சாவதில்லை. ஒருவாறு மன அமைதி

கொண்டு தலைக்கன்றினை நிறுத்தி இரண்டாங் கன்றினை யூட்டி வளர்க்கும். தரும சங்கடம், தன்னை அடைந்த ஒருவனை அப்படியே ஆழ்த்திவிடாமல் அவன் சிறந்த தான அறத்தின் வழி நின்று ஒருபால் சார இடம் தரும். இத் தரும சங்கடத்தினை எவ்வாறு நீக்கிக்கொள்ள முடியும்? வாழைப்பழம், மாம்பழம் இவ்விரண்டினும் பெருவிருப்புள்ள ஒருவனிடம் அவ்விரண்டனையும் வைத்து, "இவற்றுள் ஏதேனும் ஒன்றனை எடுத்துக் கொள்" என்றால், அவன் உடனே ஒன்றனையும் எடுக்காமல் சற்று நின்று பின், தனக்கு அப்போது, உடல் நிலைக்கேற்பவும், விருப்பத்திற்கேற்பவும் பொருத்தமான ஒன்றனை எடுத்துக்கொள்வது போல, இருபக்கத்திலும் எப்பக்கம் சார்வது சிறந்தது என்று படுகிறதோ, அப்பக்கம் சார்வது தர்ம சங்கடத்தை நீக்கிக்கொள்ளும் வழியாகும். கம்பரும், சேக்கிழாரும் தாங்கள் காட்டிய தரும சங்கடங்களை எவ்வாறு நீக்கி விட்டார்கள் என்பதைக் காண்போம்.

தசரதன்பால் வைத்த அன்பு அவனைத் துறக்கவிட இடம் தரவில்லை. இராமன் முடி சூடுவதால் உண்டான மகிழ்ச்சியும், முன்னோர் நெறியே பின்னோரும் சேறல் வேண்டும் என்னும் அறநூல் விதியும் அவனைத் துறக்க விட இடம் தருகின்றன. அதனால் சுமந்திரன்,

"புரசை மாக்கரி நிருபர்க்கும் புறத்துறை வோர்க்கும்
உரைசெய் மந்திரக் கிழவர்க்கும் முனிவர்க்கும் உள்ளம்
முரச மார்ப்பவின் முதல்மணிப் புதல்வனை முறையால்
அரச னாக்கிப்பின் அப்புறத் தடுத்தது புரிவாய்"

என்றான். அரசனைவிட மனமில்லை என்பதனால், 'இராமனை அரசனாக்கி நீ துறந்து தவத்தை மேற்கொள்க'

என்னுமல், "இராமனை அரசனுக்கிப் பின் அப்புறத்து அடுத்தது செய்க" என்றான். இவ்வகையில் தரும சங் கடத்தை ஒருவாறு நீக்கிக்கொண்டான் சுமந்திரன்.

கணவனைக் காக்கவேண்டிய கற்புநிலை ஒருபாலும், பிள்ளைப் பாசம் ஒருபாலுமாக ஈர்க்கப்பட்ட வெண் காட்டு நங்கையார், கணவன் வழிநின்று அவனைக் காப் பதே அறம் என எண்ணி, அப்போது பள்ளியிலிருக்கும் தன் பிள்ளையினைக் 'கறி சமைக்க அழைத்து வருக' எனக் கணவனிடம் கூறினார்.

"..........................
எம்பிரான் தொண்டர்
இன்று தாழா தமுதுசெயப்
பெற்றிங் கவர்தம் மலர்ந்தமுகம்
நன்று காண்ப தெனநயந்து
'நம்மைக் காக்க வருமணியைச்
சென்று பள்ளி யினிற்கொண்டு
வாரும்' என்றார் திருவனையார்"

வெண்காட்டு நங்கையார் 'நம்மைக் காக்க வருமணியை' என்று கூறியது கவனிக்கத்தக்கது முன்னர் சிறுத் தொண்டர், "எனை யிங்குய்ய நீ பயந்தான் தன்னை அழைப்போம் யாம்" என்றார். தம் பிள்ளையைக் கறி சமைப்பதால் தாம் மட்டும் உய்வதாக 'எனை' என ஒரு மையில் கூறினார் தொண்டர் வெண்காட்டு நங்கையோ, தன் மகன் கறியாகச் சமைக்கப் பயன்பட்டு அடியாரை அமுது செய்விப்பதால் தந்தையையும், தந்தை உய்வ தால் தாயையும் காப்பவனுதலின், 'நம்மைக் காக்க வரு மணியை' எனப் பன்மையில் கூறினார். இவ்வகையில்

தமக்கு வந்த தரும சங்கடத்தை நீக்கிக்கொண்டார் ஆவர்.

மேற்காட்டிய இரண்டு வரலாறுகளிலிருந்தும் தரும சங்கட விளக்கம் அறியலாம். இதற்குச் சங்க இலக்கியம் ஒன்று காட்டி இக் கட்டுரையினை முடிக்கின்றேம்

ஒரு தலைவனும் ஒரு தலைவியும் பிறர் அறியாமல் ஒரு பொழிலகத்தெதிர்ப்பட்டு இன்பம் துய்த்து வந்தனர். இவர்கள் ஒழுக்கம் சில நாட்களாக மறைவாகவே இருந்தது. ஆனல், தலைவியின் தோழிக்கும் தலைவன் தோழனுக்குமே இது தெரியும். பின் சிலநாட் சென்றதும் அயலார்க்கும் தெரிந்தது. அவரும் பலவாறு தூற்றினர். இந்நிலையில் தலைவியின் வீட்டில் அயலார் பெண் கோடற்காக மணம் பேசி வந்தனர். இதனைத் தோழி தலைவனிடம் தெரிவித்தாள். உடனே தலைவன் "செய்வதற்கு வேறென்றுமில்லை" என்றுரைத்து, "நான் என் தலைவியை யாரும் அறியாதபடி உடன் அழைத்துச் சென்று விடுகிறேன்" என்ருன். தோழியும் அதற்குத் துணை புரிவதாகக் கூறித் தலைவியிடம் சென்று தெரிவித்தாள். தலைவி அதற்கிணங்கி உடன் போக விரும்பிளுள். ஆனல், உடனே நாணம் தடுத்தது. 'தலைவனுடன் போய்விட்டால் இப்போதே அதிகமாகப் பழி தூற்றும் ஊரார், இன்னும் மிகையாகத் தூற்றுவர். அன்றியும், நாணம் நீங்கி விடும். உயிரைவிட நாணமே சிறந்ததன்ருே?'' என எண்ணிப் போக உடன்படவில்லை. ஆனல், அந் நாணினைவிடக் கற்புதானே மிகச் சிறந்தது? உடன் போகவில்லை என்ருல் தலைவன் சொல்லை மதியாதவளாகித் தலைவன் வழி நடக்கும்

கற்புத் தன்மையை இழந்தவளாவோம்" என எண்ணி உடன் போக உடன்படுகிருள் உடன்படுதலும் உடன் படாமையுமாகிய இரண்டு நிலைகளும் அவளைத் தொலைப்படுத்தின. என் செய்வாள் பேதை! ஒன்று நாணை விடவேண்டும்; ஒன்று கற்பினை இழக்க வேண்டும். இந்நிலைதானே தரும சங்கடமான நிலை! இதனை எப்படி அவள் தீர்த்துக்கொள்வது?

அவள் நினைக்கிருள்: "உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும், செயிர்தீர்காட்சிக் கற்புச் சிறந்தன்று" என்பது ஆன்ருேர் வாக்கு. ஆம்! நாணம் கற்பு ஆகிய இரண்டனுள் கற்பே சிறந்தது ஆதலின், அதற்கு இழுக்கு நேராதபடி காத்துக்கொள்வது நம் கடன் என்று எண்ணி நாணத்தை விடத் தீர்மானிக்கிருள். பிறகு தன் தோழியிடம் பின்வருமாறு கூறுகின்ருள்; தரும சங்கடம் நீங்குகிருள்.

"தோழி! நாணம் என்ற ஒன்று மிகவும் இரங்கத் தகுந்தது. நம்மோடு நெடுங் காலமாகத் தொடர்ந்து வந்தது. நம்மைத் துன்பக் காலத்தும் பிரியாதிருந்தது ஆனல், இனி அது, கரும்புப் பாத்தியின் மணற்கரையானது மிகுந்த நீர் அலைக்கச் சிறுகச் சிறுகக் கரைந்தழிவதுபோல (கற்பைக் காக்கும்) காமம் அதிகமாக நெருக்க நம்மிடம் நில்லாது ஓடிவிட்டது"

"அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீடு உழந்தன்று மன்னே இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறைத்
தீம்புனல் நெரிதர வீந்துக் காஅங்குத்
தாங்கு மளவை தாங்கி
காமம் நெரிதரக் கைநில் லாதே" (குறுந்தொகை 149)

காமம் நெருங்க நாணம் ஓடியது என்று கூறியிருப்பினும், காமம் காரணமாக (அதாவது கற்பை இழக்காததால்) நாணத்தைக் கைவிட்டேன். இனி உடன் போக ஒருப்படுகின்றேன் என்பது இதன் கருத்தாகக் கொள்ளவேண்டும்.

## 9. நாயும் கல்லும்

சொற்பொழிவாளர் ஒருவர், சொற்பொழிவினிடையே கூட்டத்தினரை நோக்கி, "நாயைக் கண்டால் கல்லைக் காணோம்; கல்லைக் கண்டால் நாயைக் காணோம்" என்று வழங்கும் பழமொழியினுக்கு என்ன பொருள்? "யாராவது தெரிந்தவர்கள் சொல்லுங்கள்" என்று கேட்டார்.

கூட்டத்திருந்த ஒருவர் உடனே எழுந்து, "நாயை அடிக்கும் இயல்புள்ள ஒருவன் தெருவில் செல்லும் போது, ஒரு நாய் அங்கு குறுக்கிடுவது கண்டான். உடனே அதை அடிப்பதற்குக் கீழே குனிந்து அங்கு மிங்குமாகக் கல்லைத் தேடினான் ஒரு கல்லும் அகப்படவில்லை. அவனே சற்று தொலைவில் சென்றதும் காலில் கற்கள் இடறுதலைக் கண்டான். உடனே ஒரு கல்லைக் கையில் எடுத்துச் சுற்றுமுற்றும் பார்த்தான் நாயை அடிப்பதற்கு. நாயொன்றும் காணப்படவில்லை. அதனால் அவன், 'நாயைக் கண்டபோது கல்லைக் காணோம்; கல்லைக் கண்டபோது நாயைக் காணோம்' என்று முணுமுணுத்துச் சென்றான். இந்த வகையில் தான் அப் பழமொழி தோன்றியது போலும்! என்று சற்று விரிவாகவே கூறினார்.

சொற்பொழிவாளர் சிறிது நகைத்து, "நீங்கள் யாவரும் அப்படி நினைத்திருப்பீர்கள் என்று தான் கேட்டேன். அதற்குப் பொருள் நீங்கள் நினைத்திருப்பது அன்று. அது ஒரு சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டது. கல்லால் ஒரு நாய் அழகாகச் செய்து வைத்திருந்தது. அதனைத் தூரத்திருந்து பார்த்தவன் உண்மையான நாய் என்று எண்ணினன். அவ்வாறு கண்டபோது அவனுக்குக் கல் என்ற உணர்வு இல்லை. அதனால் நாயைக் கண்டபோது அவனுக்குக் கல் காணப்படவில்லை. அவனே, அண்மையில் வந்து நோக்கியபோது 'இந்நாய் கல்லால் செய்யப்பட்டது' என்று அறிந்ததும் முன் கண்ட நாய் உணர்ச்சியானது அவனிடம் நீங்கிக் கல் என்ற உணர்ச்சியே நிலைத்தது. அதனால், இப்போது, அவனுக்குக் கல்லைக் கண்டதும் நாய் காணப்படவில்லை. இதுதான் உண்மைப்பொருள் அப் பழமொழிக்கு. இதனைக் கடவுளுடன் ஒப்பிடுவார்கள். அது தேவையில்லை யென்று விடுக்கின்றேன்'' என்று தம் பேச்சினைத் தொடர்ந்து பேசி அமர்ந்தார்.

அக் கூட்டத்திருந்த எமக்கு, கூட்டம் கலைந்து வீடு வந்துங்கூட நாயும் கல்லும் உடன் வந்தன. மனதை விட்டு அகலவே யில்லை. கூட்டத்திருந்த ஒருவர் கூறிய பொருளும், சொற்பொழிவாளர்தம் பொருளும் மாறி மாறித் தோன்றின. சொற்பொழிவாளர் தம் பொருளே சிறந்த தென்றார். கூட்டத்தினரும் தலையாட்டி மகிழ்ந்து சிறந்தது என்றனர். இவ்விருவகைப் பொருள்களுள் சிறந்ததெது? இவ்விரண்டுள்ளும் முதற்கண் தோன்றியது எது? இவ்வாறு பல வினைக்களை எழுப்பிக்கொண்டு விடை காண முயன்றேம். திடீரென ஒரு நிகழ்ச்சி மனக்கண்முன் தோன்றியது.

ஒருகால் தருமபுரம், அருள்திரு. அடிகளை வணங்கச் சென்றிருந்தோம். அடிகள் பண்டாரக் கட்டில் அமர்ந்திருந்தனர். ஆங்கொரு காவலன் கையில் துப்பாக்கியுடன் நின்றிருந்தான். அவனை எதிர்பாராத நிலையில் கண்டவுடன் சற்று தயக்கமாகவே சென்றோம். சென்று அவனைக் கடக்க நேர்கையில் உற்று நோக்கிய போது காவலன் பொம்மையாகக் காணப்பட்டான்.

இந்நிகழ்ச்சியில் காவலனாக எண்ணிய போது பொம்மை காணப்படாததும், பொம்மையாகக் கண்ட போது அஞ்சுதற்குரிய காவலன் காணப்படாததும் மனதில் தோன்றின. உடனே சொற்பொழிவாளர் கூறிய பொருள் சிறந்தது என முடிவு கட்டிவிட்டேம். நாயைக் கண்டால் கல்லைக் காணவில்லை; காவலனைக் கண்டால் பொம்மையைக் காணவில்லை. கல்லைக் கண்டால் நாயைக் காணவில்லை; பொம்மையைக் கண்டால் காவலனைக் காணவில்லை. எவ்வளவு பொருத்தம்! எம் முடிபு சரியானதே என்பதற்கு ஒரு பெரியார் சொன்னதும் சான்றாக அமைந்தது. அவர் திருமூலர்.

“மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்”

என்பது அவர் வாக்கு.

“மரத்தால் செய்யப்பட்ட யானை தூரத்திருந்து காண்போருக்கு யானையாகவே தோன்றி மரம் என்ற உணர்ச்சி யெழாதவாறு செய்கின்றது. அதுவே அண்மையில் சென்று மரம் என்று காணும்போது யானை உணர்ச்சியை மறைக்கின்றது. அதுபோலக் காணப்

படுகின்ற உலகம் முதலிய பூதப் பொருள்கள் தம்மை உலகம் முதலிய பொருளாகவே காணும்போது தம்முள் இருக்கும் இறைவனை வெளிப்படுத்துதல்—காண்பித்தல் இல்லை. ஆனால் அவனே தம்மிடத்துள்ள இறைவனைக் காண்கையில் அவனுக்குத் தாம் உலகம் முதலிய பூதங்கள் என்ற உணர்வு தோன்றாவாறு மறைக்கின்றன" என்பது இப் பாடலின் பொருள்.

மரமும் யானையும் போல—பரமும் பார் முதலியவும் போல நாயும் கல்லும் இருக்கின்றன என்று எண்ணிச் சொற்பொழிவாளர் பொருளே பொருள் என முடிவு கட்டினேம்.

நாய் ஒன்று ஓயாமல் குரைக்கக் காணும் ஒருவன் அதனை அடித்து விரட்ட எண்ணிக் கல்லை எடுக்கப் பார்க்கையில் கல் கிடைக்காமல் அந்நாய் ஓடி விடுதலும் உண்டுதானே? என்ற ஒரு வினா குறுக்கிட்டு அம்முடிபிற்கு வைக்கும் முற்றுப் புள்ளியினை அழித்தது.

பழமொழி தொன்றுதொட்டு வழங்கிவரும் ஒரு கருத்து நிறைந்த சொற்றொடர். ஒரு பழமொழிக்கு—ஏன்?—மேற்கூறிய பழமொழிக்கே அது தோன்றிய காலம் இன்னதென்று வரையறுத்துக் கூற இயலாது. பழமொழி உலக வழக்குமொழி. இலக்கிய வழக்கு மொழியாகாது. ஆனால் இலக்கியத்திலும் ஆளப்படும். அவ்வாறு ஆளப்படும்போது இறுதியில் 'என்று உலகினர் கூறுவர்' என்பதுபோலக் கூறப்படும். உலக வழக்கிலும் அப்படித்தானே?

"இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப

செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் உரைத்த பழமொழி யெல்லாம்
வாயே யாகுதல் வாய்த்தனம் தோழி''

என அகநானூற்றுப் பாடல் ஒன்றிலும் "பல்லோர் உரைத்த'' என்று கூறப்பட்டிருப்பதும் காணலாம். இதில் குறிக்கப்பட்ட பழமொழித் தொடர் இன்ன தென்று இக்காலத் தறியக்கூடவில்லை. உலக மொழி யாகிய பழமொழி, ஏதேனும் ஓர் அனுபவத்தை ஒட்டித் தோன்றும். அப்படித் தோன்றும்போது அப் பழமொழி பின்னர் உவமை வாயிலாகவோ காரண வகை யாகவோ பிற வகையாகவோ ஆளப்படும். நாம் எடுத்துக்கொண்ட பழமொழி உவமைக்குப் பயன்படும்.

"உரைமுடிவு காணன் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப—நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்''

இதில் "குலவித்தை கல்லாமல் பாகப்படும்'' என்ற பழமொழி காரண வகைக்குப் பயன்பட்டவாறு காணலாம். இவ்வாறே பிறவும் காண்க. நம்மால் எடுத்துக் கொள்ளப்பட்ட பழமொழி கூட்டத்துள் ஒருவர் கூறியபடி தான் உருப்பெற்றிருக்க வேண்டும். உலகில் அவ்வக் கால நிகழ்ச்சிகளுக்கேற்ப—ஒவ்வொருவர் அனுபவத் திற்கும் ஏற்பத் தோன்றிய பழமொழிகள் பல. மறைந் தன போகத் தாம் அறிந்தனவான பழமொழிகள் நானூறு திரட்டி அவற்றை உதாரணங்களால் விளக்கி முன்றுறை யரையனார் என்னும் புலவர் பெருமானார் பழமொழி என்ற நூலினைச் செய்தருளினார். அவரது

நூலில் உள்ள ஒரு பாடலும் நம்மாற் பேசப்படும் பழமொழியினைக் கூறுகின்றது.

"மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை
ஆய்வின்றிச் செய்யாதார் பின்னை வழிநினைந்து
நோய்காண் பொழுதின் அறஞ்செய்வார்க் காணுமை
நாய்காணிற் கற்காணு வாறு"

இப்பழமொழிப் பாட்டின் ஈற்றடி நம்} பழமொழியன்றோ? "இறப்பிற்குரிய நோய் வராத காலத்தில்—நல்ல ஓட்டம் உள்ள காலத்தில், கையிற் பொருள் இருந்தும்—தான் சொல்லும் அறத்தினைச் செய்து நிறைவேற்ற ஆள் இருந்தும், ஒருவனுக்கு உடனே அவ்வறம் செய்ய மனம் இல்லை. அதனால் பின் செய்துகொள்வோம் என இருந்தான். காலம் கடக்க அவனுக்கு நோய் வந்தது. சாக்காடு நெருங்கி விடுமோஎன எண்ணினான். இருக்கும் பொருளைக்கொண்டு அறம் செய்ய எண்ணினான். அவ்வறத்தைச் செய்து நிறைவேற்ற ஆள் அகப்படவில்லை. அவன் நிலை, "நாயைக் கண்டால் கல்லைக் காணவில்லை" என்ற நிலைபோன்றதாகும்" என்பது இதன் கருத்து.

நாய் கல்லால் விரட்டற்குரியது. நோய் அறத்தால் போக்கற்குரியது. நாயைக் கண்டவனுக்கு விரட்டக் கல் அகப்படவில்லை. நோய் கண்டவனுக்குத் தான் காணும் அறத்தைச் செய்து நிறைவேற்றுவாரைக் காணவில்லை. இப்பழமொழிப் பாட்டு கூட்டத்துள் ஒருவர் கூறிய கருத்தினையே கொண்டிருக்கின்றது. இதனால் முதலில் கூறப்பட்ட பொருளே சிறந்ததாகும் என்று கூறிவிடலாமா?

பழமொழிப் பாடலால் விளைந்த ஐயம் முன் கொண்ட முடிபினைத் தாக்கப் பின்வரும் கொள்கைகள் தோன்றின.

1. கூட்டத்து ஒருவர் கூறிய முறைப்படியே, உலகில் இப்பழமொழி உருப்பெற்றிருக்க வேண்டும். பின்னர், திருமூலரின் "மரத்தை மறைத்தது மாமத யானை" என்ற வாக்கு வரவே அதன் கருத்தை யறிந்த புலவர்கள், அதனோடு ஒப்புடையதாகக் கொண்டு தம் கருத்தினையே சிறந்ததாகக் கூறி வந்திருக்கவேண்டும்.

2. தருமபுர நிகழ்ச்சியைப் போலவும் திருமூலர் கருத்தினைப் போலவும் வழக்கில் வழங்கிய இப் பழமொழி பின்னர், நறுமணத்திற்கு வழங்கிய நாற்றம் என்ற சொல் பின்னர் அதற்கு மாறானதற்கு வழங்குவது போலப், பாமர மக்களால் நாயை அடிக்கும் தீத்தொழிலுடன் தொடர்புபடுத்தி வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

இவ்விரு கொள்கைகளில் எது பொருந்தும் என்பதை அறிஞர்கள் முடிவு கட்டுவார்களாக. இவைகளில் பாமரர் வழக்கில் முதற்பொருளே நிலைப்பதாயிற்று. பின்னது புலவர் உலகில் நிலைப்பதாயிற்று. ஆனால் இலக்கியத்திலும் முதற்பொருள் ஏறியுள்ளது என்பதையும் மேற் பழமொழிப்பாட்டு நமக்கு அறிவிக்கின்றது.

# 10. பொருட் பிரிவு

"வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்
நடுவண தெய்த இருதலையும் எய்தும்
நடுவண தெய்தாதான் எய்தும் உலைப்பெய்து
அடுவது போலும் துயர்"

இவ்வுலகில் ஒருவன் பெறவேண்டியன அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுமேயாம். இடைப்பட்ட பொருளால் அறம் செய்து இன்பம் துய்க்க வேண்டும். அறத்திற்கும் பொருள் இன்றியமையாதது; இன்பத்திற்கும் இன்றியமையாதது. அதனாலேயே இம் மூன்றினையும் நிரல்படக் கூறியபோது பொருளை இடையில் வைத்துக் கூறினர் அறிஞர். வள்ளுவர் குறளும் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என அமைந்ததும் காணலாம். அப்பொருளும் அறவழி யீட்டப்பட வேண்டும் என்பதற்காக அதனை முன்வைத்துப் பொருளினைப் பின் வைத்தனர். பொருளின் சிறப்பினை வள்ளுவர்,

"அருளிலார்க் கவ்வுலகம் இல்லை பொருளிலார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு"

எனக் கூறினர். பொருள் இல்லாதவர்க்கு இவ்வுலகம் இல்லை யெனச் சுருக்கமாகவும் இதைவிடச் சுருக்கமாகப் பிறர் கூற முடியாதபடியும் வள்ளுவர் கூறிவிட்டனர். உலகில், "பணமில்லாதவன் நடைப் பிணம்" என்கின்றனர். தகுதியற்றவன்—மதிக்கப்படுதற்குரிய நிலையில்லாதவன், பொருளுடையவனாக இருந்தால், தகுதியுள்ளவனும் -கல்வி கேள்விகளிற் சிறந்தவனும் அவன்பால் சென்று கைகட்டித் தான் தாழ்ந்து அவனை உயர்ந்தவ

ளுக்கி விடுவான். உறவில்லாதவனும் ஏதேனும் ஓர் உறவினைக் கூறிக்கொண்டு நெருங்கி விடுவான். ஏன்— பகைவனும் அடிபணிவான்.

பொருள் ஒரு விளக்குப் போன்றது. விளக்கு இருளைப் போக்கும். விளக்கு எவ்வளவுக்கெவ்வளவு ஒளியுடையதாக இருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு தான் பரந்து இருளைப் போக்கும். பொருள் எவ்வள வுக்கெவ்வளவு மிகுதியாக இருக்கின்றதோ அவ்வளவுக் கவ்வளவு பகையைப் போக்கும். ஆனால், விளக்கு இருந்த இடத்திருந்து குறிப்பிட்ட அளவே இருளைப் போக்கும்; செல்வம் தன்னையுடையான் எண்ணியதேயம் எங்கும் சென்று பகையைப் போக்கும்.

இத்தகைய சிறப்பினைக் கண்ட யாவரும், ஒவ்வொ ருவரும் பொருளீட்ட வேண்டும் என்றனர். திரைகட லோடியும் திரவியம் தேடு'' என்றனர். திருத்தக்க தேவரும்,

"செய்கபொருள் ஆரும்செறு வாரைச்செறு கிற்கும்
எஃகுபிறி தில்லையிருந் தேயுயிரும் உண்ணும்
ஐயமிலை யின்பமற னோடெவையு மாக்கும்
பொய்யில்பொரு ளேபொருள்மற் றில்லைபிற பொருளே"
(சிந்தா. 497)

என்றனர். "செய்க பொருள் ஆரும்'' என விதித்தனர் தேவர். பொருள் செய்வ தெவ்வாறு? அறத்தால் செய்தல் வேண்டும் அறத்திற்கின்றியமையாத அன்பு அருள் ஆகிய இரண்டின் துணைகொண்டு செய்தல் வேண்டும். கொலை, கொள்ளை முதலிய தீய வழிகளில் ஈட்டும் பொருள் தீப்பொருள் என்று பெயர்பெறும். அதனால் தீதின்றி வரும் பொருளே வேண்டுவது.

அதுவே 'அறனீனும் இன்பமும் ஈனும்'. அதுவே மேலும் மேலும் அன்பினையும் அருளினையும் வளர்க்கும். அதுவே அச்சமின்றி ஒரு காரியத்தைச் செய்து முடிக்கத் துணைபுரியும். தேவருக்கு முற்பட்ட நம் வள்ளுவரும்,

"செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்"

என்று கூறியுள்ளார்.

தமிழ் நாட்டு மக்கள் கொண்ட அறங்கள் இரண்டு, இல்லறம் துறவறம் என. பொருள் செய்யும் கவலை இல்லறத்தானுக்கே வேண்டுவது. இயல்பாகவே தன்னால் காப்பாற்றப்பட வேண்டிய மூவராகிய பெற்றோர், மனைவி, மக்களுக்கும், துறவிகட்கும், வறியவர்கட்கும், அனாதையாக இறந்தவர்கட்கும் துணையாவதும், தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் ஆகியவர்களை ஓம்புவதும் இல்லறத்தான் கடன் ஆதலின் அவற்றிற்கின்றியமையாத பொருளைத் தேடும் கவலை இல்லறத்தானுக்கே யுரியது என்னவும் வேண்டுமோ?

இல்வாழ்வானுக்கு இன்றியமையாதது புகழ். அது எதனால் வரும்? இரப்பார்க்கொன்றீவதால் வரும். அவ்வீதலால் வரும் இன்பம் சொல்லும் தரமன்று. மாணவனுக்குப் பாடம் பயிற்றும்போது, மாணவன் பயிற்றும் பாடம் நன்கு புரிந்து காட்டும் முகமலர்ச்சியினால் ஆசிரியன் மகிழ்வான். அம் மகிழ்ச்சியே அவனுக்குப் பெருமகிழ்ச்சி. அதுபோல ஒருவனுக்கு ஈந்த அளவில் அவன் உறும் இன்பம் கண்டு இவனுறும் இன்பமும் சொல்லுதற்கரிதாகும். இவ்வின்பத்தை 'ஈத்து

வக்கும் இன்பம்' என்றார் தெய்வப்புலவர். இவ்வின்பம் பொருள் இலார்க்குண்டோ? ஈதலால் இன்பம் மட்டுமா—புகழும் கிடைக்கின்றதே! அப்புகழ் அழியாதே! உடம்பழியும்; புகழ் அழியாது. அதனால், புகழும், 'உடம்பு' எனப்பட்டதோடன்றி 'அழியா வுடம்பு' எனவும் சிறப்பிக்கப்பட்டது.

"ஒருவனை திரண்டி யாக்கை யூன்பெய்து நரம்பு போர்த்த
உருவமும் புகழும் என்றாங் கவற்றினுள் ஊழின் வந்து
மருவிய யாக்கை யிங்கே மாய்ந்துபோம் மற்றை யாக்கை
திருவமர்ந் துலகம் ஏத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே"

(சூளா. சீய. 204)

என்ற சூளாமணிப் பாடலையும் காண்க. எனவே, புகழ் வேண்டும் என்ற எண்ணம் உள்ள இல்வாழ்வான் அதற்கின்றியமையாத பொருளைத் தேடாதிருப்பானோ? அதனால் எப்போதும் பொருட்கவலை யுள்ளவனாகத் தான் இருப்பான்.

ஒருவனும் ஒருத்தியும் முன்பின் அறியாதவராக இருந்தும் ஊழ்வலியால் ஒரு பொழிலகத் தெதிர்ப்பட்டுத் தம்முள் காதல் கொண்டு பின் மணம் புரிந்து இல்லற நெறியில் இருக்கும் ஒழுகலாற்றினை 'அகம்' என்ற பெயர் கொடுத்து, அதற்கோர் இலக்கணமும் செய்த முன்னோர்கள், இல்லறத்திருக்கும் அவ்வொருவன், தன் மனைவியைப் பிரிந்து தொலை தூரம் சென்று பொருள் தேடுதலையும் அவன் கொண்ட ஒழுகலாறாக வகுத்தனர். அதற்குப் பொருட் பிரிவு—அல்லது 'பொருள்வயிற் பிரிதல்' எனப் பெயர் கொடுத்தனர்; விதிகளும் வகுத்தனர்.

ஈண்டு ஓர் ஐயம் எழுவது இயல்பே. பொருள் தேடும் கவலை பொருள் இலானுக்குத்தானே? பொருள்

நிரம்ப உடையானுக்கும் வேண்டுமோ? என்பது. ஒரு வன், வாழ்க்கையில் ஈடுபடும்போது அவனிடம் அவன் முன்னோர் ஈட்டிய பெரும் பொருள் கிடக்கலாம் அத ஞல் அவன் பொருட்கவலை கொள்ள வேண்டுவதில்லை தான். தனக்குள்ள பொருள் எவ்வளவுதான் மிகுதி யாக இருப்பினும் தானே உழைத்து ஈட்டிய பொரு ளிடத்தே அவனுக்கு மதிப்புமிகும். முன்னோர் பொருள் கொண்டு துய்ப்பவன் சிறந்தவனுகக் கருதப்படான். இதற்கு நக்கீரர் கூறிய காரணம் பின்வருவது.

"இனிப் பொருட் பிணி" என்பது பொருளிலனுய்ப் பிரியும் என்பதன்று. தன் முதுகுரவரால் படைக்கப் பட்ட பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாம் கிடந் ததுமன், அதுகொண்டு துய்ப்பது ஆண்மைத்தன்மை யன்றெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியும் என்பது; அல் லதூஉம், தேவர் காரியமும் பிதிரர் காரியமும் தனது தாளாற்றலாற் படைத்த பொருளாற் செய்தனவல்லது பயன்படாது; என்னை, தாயப்பொருளாற் செய்தது தேவரும் பிதிரரும் இன்புறுர்; ஆதலான் அவர்களையும் இன்புறுத்தற்குப் பிரியும் என்பது."

இவ்வாறு பொருளீட்டக் கருதிய ஒருவனுக்கு அதற்குரிய ஊக்கத்தினை—முயற்சியினை நான்கு நிகழ்ச் சிகள் கிளர்ச்சியுறச் செய்யும். அவன் மனம் அந்நான் கினையும் நன்கு ஆராய்ந்து ஒரு நிலைப்படும்.

(1) "நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

என்றார் வள்ளுவர் சில்வாழ்நாள் பல்பிணிச் சிற்றறி வுடையனவாம் உயிர்கள் என்றனர் அறிஞர். எனவே

நாம் எவ்வளவு காலம் வாழ்வோம் என்பது நமக்கே தெரியாது. பெறுதற்கரிய மனிதப் பிறவியைப்பெற்ற நாம்—பலர்க்கும் துணையாகக்கூடிய இல்வாழ்க்கை நெறியில் நின்ற நாம் காலத்தைக் கடத்தாமல் விரைந்து வாழ்வின் பயனாகிய புகழை எய்துதல் வேண்டும். அதற்கின்றியமையாத பொருளை இன்னே தேடுதல் வேண்டும். முதுமைக் காலத்தில் தேட இயலாது.'' இவ்வாறெல்லாம் எண்ணிப் பார்க்கவே அவனை, வாழ் நாளின் சிறுமை பொருளீட்டத் தூண்டும்.

(2) சிலர் எண்ணுவர். எண்ணித் துணிவர்; ஆனால் துணிந்து செயலில் இறங்கும்போது மடிதோன்றிக் காரியம் கெடுவர். அவ்வாறு மடியின்றிச் சூழ்நிலையும் ஊக்கப்படுத்த இளமை முறுக்கும் உள்ளத்தைத் துரத்த முயற்சியுள்ளம் பொருள்தேடக் கிளர்ச்சியுண்டு பண்ணும்.

(3) தன்னிடம் வந்து இரந்தார்க்கு,

"இல னென்னும் எவ்வம் உரையாமை யீதல்
குல னுடையான் கண்ணே யுள"

என்ற வள்ளுவர் வாக்குப்படி இதற்கு வழியில்லையென்றால், குலமுடையான் படும்பாடு சொல்லுந் தரமன்று. குலமுடையான் 'இல்லை' என்றான். அதனால் பொருள் இன்மையைப் போக்க முற்படுவான். 'இல்லை' யென்று சொல்ல நேர்ந்ததை இழிவாகக் கருதுவான்; இழிவினைப்போக்க முயற்சிப்பான்; பொருளீட்ட முற்படுவான். அதனால், இன்மையது இழிவு பொருளீட்டத்தூண்டும். பொருளுடையவனாயினும் தானீட்டிய பொருளையே பொருள் எனக் கருதுவான் குலம் உடையான்.

(4) பலகால் பாலே நுகர்வான் பாலருமை அறியான், நிழலருமை யாருக்குத்தெரியும்?

"நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின் ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழகுதமிழ்ச்
சொல்லருமை ஆரியத்தில் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்"

என்ற பாடலைக் காண்க. தன் மனைவியை—காதலியை ஒருநாளும் பிரிந்தறியான் அவள் அருமையை எவ்வாறு அறிய முடியும்? இன்பச் சிறப்பினை யறியமுடியுமோ? அதனால் இல்லறத்தான் இன்பத்தின் அருமையை நன்கு உணர்வது பிரிவினால்தானே நேரும். இப்பிரிவினை இன்பமிகுதி கருதி மேற்கொள்வான். இந் நினைப்பும் ஒரு காரணமாகப் பொருள் ஈட்டத் தூண்டும்.

இந் நான்கும் இல்வாழ்வான் பொருளீட்டவேண்டிய உள்ளத்தினைக் கிளர்ச்சியுறச் செய்யும். இக்கிளர்ச்சியுற்ற அவன் பலகால் எண்ணி எண்ணி, ஒரு முடிபிற்கு—அதாவது பொருளீட்ட வேண்டித் தலைவியைப் பிரியத்தான் வேண்டும் என்ற முடிபிற்கு வருவான். வருபவன் தன் கருத்தினைத் திடீரெனத் தன் மனைவியிடம் கூறிவிட முடியுமா? அதனை எவ்வாறு கூறுவது என எண்ணித் தன்மனதோடு போராடுவான்.

"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிகுத் தெண்ணுதி யவ்வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ
வெம்மை யுய்த்தியோ வுரைத்திசின் நெஞ்சே"
(குறுந். 189)

இவ்வாறு தன்மனதோடு கூறிக்கொண்டு தன் முடிபினில் சிறிது தளர்தலும் உண்டு. ஆனால் அத்தளர்ச்

சியை மடியின்மை—தாளாண்மை நீக்கிவிடும். மீண்டும் பழைய முடிபிற்கே வருவன்.

பின்னர் அதுவரை யில்லாத ஒரு சிறந்த அன்பினைத் தலைவியிடம் காண்பிப்பான். தலைவி, அதன் காரணம் இன்னதென்று அறியாது பின், பிரிவினை அறிவிக்கின்றானோ தலைவன்' என ஐயுறுவாள். இரண்டொரு நாளில் தான்புறப்பட எண்ணிய நாளுக்கு முன்னால், நேரே தலைவியிடம் கூறினால், பிரிவையே யறியாத அவள், கதுமெனக் கேட்டதும் துன்புறுவாள் ஆதலின் நாம் அவளுக்குத் தோழிமூலமாகவே அறிவித்தல் வேண்டும் என எண்ணித் தோழிக்கு அறிவிப்பான். அறிவிக்கும்போது முன்கூறிய நாளின் சுருக்கம், முயற்சி, இன்மையின் இழிவு, அன்பின் மிகுதி ஆகிய காரணங்களைக் கூறி 'நான் பொருள் காரணமாகப் பிரிய நினைக்கின்றேன்' என்பான். கேட்கும் தோழி தலைவியின் உள்ளத்தினை நன்கறிந்தவளாதலின் 'இதனைக் கேட்டால் தலைவி வருந்துவாள்; அன்றி இறப்பாள்' என்று எண்ணித் தலைவனைப் பிரிதலைத் தடுக்க முயல்வாள். அவன் காட்டும் காரணங்களுக்கு நேர் நேராகவே தக்க காரணங்களைத்தான் காட்டித் தடுப்பாள்.

(1) "தலைவ! நீ நாளின் சிறுமை காட்டிப் பொருட்குப் பிரிய எண்ணுகின்றாய். ஆம்! வாழ்நாள் சிலவே மக்களுக்கு. விரைந்து பொருள் ஈட்டவேண்டுவதே. ஆனால் சற்று நீ நினைத்துப் பார்க்கவேண்டும். நீயும் கட்டிளங்காளை; எம்தலைவியும் இளையள்; அழகியள். வாழ்நாள் சில என்றெண்ணிப் பொருட்குப் பிரியும் நீ அச்சில்வாழ் நாளிலேயே இளமையும் முதுமையும் அடங்கும் என்பதையும் கண்டு இளமையின்

சின்மையையும் உணரவேண்டும். அவ்விளமை வீணே பொருளீட்டுவதில் கழியும் என்றால் இளமையை மீண்டும் பெறமுடியுமோ? ஒத்தகாதலுடையராய் வாழ்வாரது வாழ்க்கையே வாழ்க்கை. அவ்வொத்த காதலர் இளமையில் துய்க்க வேண்டுவனவற்றைத் துய்ப்பதன்றே வாழ்க்கையில் பெறும் பயன். அவ்வின்பத்திற்கு இடையூறு செய்யும் பொருளீட்டற்பிரிவு வேண்டத்தக்கதாமோ? அவ்வின்பத்தை மிகுவிக்கும் இளமையன்றே வேண்டத்தக்கது இளமை மீண்டும் பெறற்கரிது என்பதை நினைவிருத்துக.

(2) 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' என்பது உண்மை. நீயும் கருதிய பொருள் அனைத்தையும் கைவரப் பெறுவாய் என்பதில் ஐயமில்லை. முயற்சி குன்றாத—சோம்பல் சேராத இக்காலத்திலேயே பொருளீட்டவேண்டுவதே. ஆனால் நீ செல்லும் இடத்தில் ஒரு சேரக்குவிந்து கிடக்குமா பொருள்? செல்லும் இடத்தில் தத்தம் தகுதிக்கேற்ப அன்றே பொருளீட்ட வேண்டும்? அவ்வாறு நீயும் பொருளீட்டுங் காலத்தில் நாட்கள் பல கழியுமன்றே? அதனால் இன்ப நுகர்ச்சிக்கு இடையூறுண்டன்றே? பொருள்தேடப் போகாதிருப்பவர்கள் உண்ணுமல் பட்டினிகிடந்தா சாகின்றார்கள்? நன்றாக நினைத்துப்பார். பொருளீட்டுதலுக்காகப் பிரிவது இப்போது வேண்டத்தக்கதன்று.

(3) இன்மை இழிவுதான். அதுகருதிப் பொருளீட்ட வேண்டுவதுதான். பொருள் ஏன்? சிந்தனைக்கு இடம் கொடு. இன்பம் துய்ப்பதற்குப் பொருள் தேவை. பொருளால் இன்பம் துய்க்கலாம். இல்வாழ்வானுக்கு இன்பமாவது யாது? ஒத்த மனைவியுடன் ஒத்த கருத்

தில் பெறும் இன்பமே இன்பம். அவ்வின்பத்திற்கு இளமையே ஏற்றகாலம். ஒத்த இளமையும் ஒத்த காதலும் பெற்றவர்கள் பெறும் இன்பம் சிறந்ததாகும். அதற்குச் செல்வம் இருந்துதான் ஆகவேண்டுமோ? அதனால் இன்மை இன்மையாகுமோ? செல்வம் என்பதுயாது? செல்வம் என்பது சிந்தையின் நிறைவு தானே! ஒத்த காதலரிடையே சிந்தை நிறைவில்லா திருக்குமோ? ஒரே ஆடையினை இருவரும் மாறி உடுப்பவர் என்றாலும்—அதாவது அவ்வளவு வறுமையினை உடையவர் என்றாலும் அவர் இளமையும் காதலும் ஒத்த நிலையில் பெற்றாராயின் அவர் செல்வத்தை ஒருக்காலும் நினையார். அதனால் இன்மையின் இழிவுகண்டு பிரிதலைத் தவிர்க.

(4) அன்பின் மிகுதிப்பாடு கண்டு பிரிய எண்ணுகிறாய். பிரிந்து வாழ்தலைவிடக் கூடிவாழ்தலே மேன்மையானது. பிரிந்தால் கூடிவாழ்தலின் சிறப்புத்தெரியும் அவ்வளவேயன்றி சிறிதுகாலமேனும் பிரிந்திருந்த துன்பம் உண்டன்றோ? அதனால் ஒன்றிவாழ்வதே வாழ்வாம். ஒன்றி வாழும் இக்காலத்தினை—அவ்வாழ்வில் வந்த இன்பத்தினை நன்றாக நினைத்துப்பார். பார்த்தால் பிரிய ஒருப்படமாட்டாய். தலைவியை அகல்வது அருமை என்பது பெறுவாய்.''

இவ்வாறாகத் தலைவனைத் தோழி நான்கு வகையில் காரணம் காட்டித் தடுப்பாள். இவ்வாறு தடுத்ததாக உள்ளபாட்டு கலித்தொகையில் ஒன்றுண்டு.

“அரும்பொருள் வேட்கையின் உள்ளம் துரப்பப்
பிரிந்துறை சூழாதி ஐய விரும்பிநீ
என்றோள் எழுதிய தொய்யிலும் யாழநின்

மைந்துடை மார்பிற் சுணங்கும் நினைத்துக்காண்
சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது
ஒழிந்தவ ரெல்லாரும் உண்ணுதும் செல்லார்
இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ உளநாள்
ஒரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை
ஒன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினும்
ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற இளமை தரற்கு'' (கலி. பாலை 17)

இதன்கண் தோழியின் ஆற்றலைக் காணலாம். தொல்காப்பியர் இவ்வாறு பிரிதற்குக் கூறும் காரணங்களையும் தடுத்தற்குக் கூறும் காரணங்களையும்

''நாளது சின்மையும் இளமையது அருமையும்
தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும்
இன்மைய திழிவும் உடைமையது உயர்ச்சியும்
அன்பின தகலமும் அகற்சிய தருமையும்''

எனத் தொகுத்தனர். மேற் கலிப்பாட்டில் நச்சினார்க்கினியர் இவ்வெட்டும் அமைந்தவாற்றை விளக்கினர்.

"இதனுள் 'உளநாள்' என்றது நாளது சின்மை. 'சென்ற இளமை தரற்கு அரிது' என்றது இளமைய தருமை; 'உள்ளம் துரப்ப' என்றது உள்ளம் உருற்றுதலால் தாளாண் பக்கம்; 'சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது' என்றது தத்தம் நிலைமைக்கு ஏற்பப் பொருள்தேட வேண்டுதலின் அது பாணிக்கும் என்றலின் தகுதிய தமைதி; 'ஒரோ ஒகைதம் முட்டழீஇ ஒன்றன் கூறுடை யுடுப்பவரேயாயினும், என்றது இன்மையதிழிவு; 'இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார் வளமை

விளைதக்க துண்டோ!' என்றது உடைமைய துயர்ச்சி; 'பிரிந்திறை சூழாதியைய' என்றது அன்பினதகலம், பிரிந்துறைந்து அன்பு பெருக்க வேண்டா, 'ஒன்றினர் வாழ்க்கையே வாழ்க்கை' யென்றலின்; 'தொய்யிலும் யாழ நின் மைந்துடை மார்பிற் சுணங்கும் நினைத்துக் காண்' என்பது அகற்சிய தருமை."

இஃதவர் விளக்கம்.

தோழியானவள் இவ்வாறு காரணங்கள் காட்டித் தடுத்தலேயன்றித், 'தலைவி யிது கேட்டால் இறந்துபடு வாள்' என்பது போலவும், 'செல்வம் நிலையாது' என் பது போலவும் காரணங்கள் காட்டித் தடுப்பதும் உண்டு.

தோழியால் இவ்வாறு தடுக்கப்பட்ட தலைவன், தான் பொருள்வயின் பிரியக் கருதிய காரணங்களும் தடுத் தற்குரிய காரணங்களும் தன்னைத்தாக்க எப்பக்கமும் சாராது, 'இருதலைக் கொள்ளி யெறும்பு' எனத் தவித் துத் தருமசங்கட நிலையடைந்து, பின் ஒரு பக்கம் சார வேண்டுவதே கடனாதலின் பிரிவதே கடன் என எண் ணித் தலைவியிடமும் அறிவிப்பான். தலைவியும் வருத்த முற்றுத் தோழிகூறி யாங்குக் கூறித்தடுப்பள். இளமை மீட்டற்கரிது என்பதையும் பிறவற்றையும் எடுத் துரைப்பள். பின்னர் தானும் உடன்வருவதாகக் கூறு வள். அவன் செல்லும் அருமை கூறித்தடுப்பன். பின் னரும் அவள்,

"செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை"

என்றும், செல்வதே கருத்தாயின்,

"செல்வினிச் சென்றநீ செய்யும் வினைமுற்றி
யன்பற மாறியாம் உள்ளம் துறந்தவள்
பண்பும் அறிதிரோ என்று வருவாரை
என்திறம் யாதும் வினவல் வினவின்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலரும் செய்வினை முற்றாமல் ஆண்டோர்
அவலம் படுதலும் உண்டு" (கலி. பாலை 18)

என்றும் கூறித்தடுப்பள். ஈண்டும் தலைவனுக்குத் தயக்கம் ஏற்படும். பின் தெளிவுண்டாகிப் பிரியும் முடிபினை நிலை நிறுத்துவான். ஒருநாள் எப்படியும் பிரிந்துவிடுவான்.

தலைவன் பிரிவதற்கு முன்னரே—தலைவன் தன்னிடம் பிரிவுணர்த்துதற்கு முன்னரே தலைவி பிரிவை யுணர்ந்து துன்புறுதலும், அதனைத் தோழி,

"வினையே யாடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க் காடவர் உயிரென
நமக்குரைத் தோரும் தாமே
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே"

என ஆற்றுவித்தலும் உண்டு. தலைவன் பிரிந்து சென்ற பின்னர் தலைவி மிகவும் துன்புறுதலும் ஆண்டும் தோழி ஆற்றுவித்தலும் உண்டு. தலைவன் சென்ற வழியின் கொடுமை நினைந்து வருந்துவள்; வேனில வெம்மை தலைவனைத் துன்புறுத்தும் என நினைந்து துன்புறுவள். அக்காலங்களிலெல்லாம் தோழியும் தக்க சமாதானம் கூறி ஆற்றுவிப்பாள்.

"தலைவர், சென்ற இடத்தில் அஃறிணைப் பொருள்கள் ஆணும் பெண்ணுமாகக் கூடிக் குலாவுதலைக் காண்

பார்; உடனே நாம் இவ்வாறிருத்தற்கில்லையே யென எண்ணுவார்; அதனால் எடுத்த காரியத்தை வெற்றி யுடன் விரைவில் முடித்துத் திரும்புவார்; அவர் வருவ தாகக் குறித்துச் சென்ற காலமும் இதோ வந்துவிட் டது; இனி யுன் துயரைவிடு" என்றெல்லாம் கூறிச் சமா தானப் படுத்துவாள் சில சந்தர்ப்பங்களில் தலைவியின் மிகத் துயர்கண்டு அவளுக்குப் பரிந்து பேசுவதுபோலத் தலைவனைக் கொடியன் எனக் கூறி, அதனால் அவன் பால் அவள் கொண்ட அன்பின் ஆழத்தைக் கண்டு உளம் மகிழ்வாள். தலைவியும் தலைவன் பிரிவால் எவ் வளவுதான் துன்புற்றாலும் அவனுக்கு யாதோர் ஊறும் நேராவாறு கடவுளர்களை வேண்டுவமோ என எண்ணு வாள். ஆனால் கணவனே கடவுள் என எண்ணியவளாத லின் பிறதெய்வத்தை வணங்கவும் மனம் இல்லாதவ ளாகித் தோழியிடம் கூறி ஆறுதலடைவாள்.

"தொன்னலம் தொலைபீங்கியாம் துயருழப்பத் துறந்துள்
துன்னிநங் காதலர் துறந்தேகும் ஆரிடைக் (ளார்
கல்மிசை உருப்பிறக் கனைதுளி சிதறென
இன்னிசை எழிலியை இரப்பவும் இயைவதோ"

"புனையிழாய் ஈங்குநாம் புலம்புறப் பொருள்வெஃகி
முனையென்னார் காதலர் முன்னிய ஆற்றிடைச்
சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ"

"ஒளியிழாய் ஈங்குநாம் துயர்கூரப் பொருள்வயின்
அளியொரீஇக் காதலர் அகன்றேகும் ஆரிடை
முளிமுதல் மூழ்கிய வெம்மைதீர்ந் துறுகென
வளிதரு செல்வனை வாழ்த்தவும் இயைவதோ" (கலி-15).

இவ்வாறு கூறிச் சமாதானப்படுவாள் தலைவி. ஆற்ருமை அதிகப்படுமாஞல் கண்ட கண்ட பொருள்களிட மெல்லாம் கூறி ஆற்றிக்கொள்வாள். வானத்தை நோக்கி, "ஏ மேகமே, நீ, முதுவேனிற் காலம் இது ஆதலால் வெண்மையாக இருக்கின்ருய்; தலைவனை மழை பெய்யாது வறந்து என்ன கொடுமை செய்கின்ருயோ? ஒன்றுசெய்; யான் அதுகுறித்து அழும் இவ் வேளையில் என் கண்களில் நீர்வற்ருது சொரிகின்றது; இதனைக் கூட்டமாகவந்து முகந்து அவர் சென்ற காட்டில் மழையாகப் பொழிக" என்று வருந்தியதாக ஒரு பாட்டுண்டு.

"தாழ்பு, துறந்து தொடிநெகிழ்த்தான் போகிய கானம்
இறந்தெரி நையாமற் பாஅய் முழங்கி
வறந்தென்னை செய்தியோ வானம்! சிறந்தஎன்
கண்கள்நீர்க் கடலால் கனைதுளி வீசாயோ
கொண்மூக் குழீஇ முகந்து"

இது கலிப்பாட்டில் கண்டது.

இனிப் பிரிந்து சென்ற தலைவன், தான் கருதிய இடம் செல்லுமுன் இடைவழியிலேயே, தன்னெஞ்சம் தலைவியைப் பிரிந்தமைக்கு வருந்த, அதஞல் திரும்பிவிடலாமா என்ற எண்ணம் தோன்ற அதனைச் சமாளித்து மீளாது செல்லுவான். சென்று இடையிடையே தலைவியை நினைந்து நினைந்து வருந்துதலும் உண்டு. எனினும் காரியத்தை நிறைவேற்ருமல் மீளல் இல்லை. செல்லுமிடங்களில் துணைபுணர் களிறு முதலியன கண்டு, மனம் தலைவிபால் செல்லுதலும் ஏற்படும். காமத்தினை மிகுவிக்கும் பொருள்களால் தலைவியை நினைந்து துன்புறுவான். முடிவாகப் பொருளை முற்ற

முடித்துக்கொண்டு மீளும்போது, தன் பாகனிடம் ஏதேனும் உரையாடிக்கொண்டே வழி வருத்தம் இன்றி வருவான்.

இப்பால் மனையகத்து வருந்தி ஆற்றியிருக்கும் தலைவி, தலைவன் வருவதாகக் குறித்துச் சென்ற காலம் வந்தால், 'இன்றுவருவார், என நாளும் நினைந்து வீட்டின் வாயிலில் நின்று நின்று, பல்லி யடித்துக்கொள்ளத் தலைவன் வருவதைத்தான் குறிக்கின்றதென்று கொண்டு பார்த்துப் பார்த்து உள்ளே செல்லும் நிலையுடையவளாவாள். இந்நிலையில் தலைவன்வந்து சேர்வான். அதனால் வீட்டில் விருந்து நடைபெறும்.

இதுகாறும் கூறிவந்தது இல்லறத்திற்கும் தலைவன் பிரிவையேயாகும். ஒருவன் ஒருத்தியைக் காதலித்து அவளை மணந்துகொள்ள வேண்டும் என எண்ணி, அதற்குத் தன் பெற்றோர் பொருளினும் தானேயீட்டிய பொருளே சிறக்கும் என்று பொருள்வயின் பிரிதலும் உண்டு. இதற்கும் இலக்கண நூலார் இடம் கொடுத்துள்ளனர், தலைவியோடு பொருள்தேட வெளியூர் செல்லலும் உண்டு. அது சிறுபான்மையே நிகழ்வது. அவ்வாறு செல்வதற்குமேல் குறித்த நிகழ்ச்சிகள் இல்லை. ஆனால் கடல் கடந்து பொருளீட்டவேண்டின் தலைவியோடு செல்வதில்லை. "முந்நீர் (கடல்) வழக்கம் மகடூஉவோடில்லை" என்றார் தொல்காப்பியர்.

இக்கட்டுரை அகப்பொருள் இலக்கண நூலார் கூறிய வகையில் எழுதப்பட்டது. இக்காலத்திலும் பொருத்தமுடையன பொருத்தமாகும்.

முற்றிற்று.